Regd. No: 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 304-305

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.



வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100





ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய வவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.



1974ல் ஜனவரியில் வெளியிடப்பட்டது

Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் -304-305

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
Mahamahimopadhyaya
P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1974௵ ஜனவரியில் வெளியிடப்பட்டது

ஸ்ரீ ராமாநுஜன் 304-305



ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 26 | ப்ரமாதீச ஹு மார்கழி தையீ | ஸஞ்சிகை 4, 5

# மார்கழித் திங்களுக்கு ஏற்றம் மாலையைச் சூடிக் கொடுத்தவளால்

"மன்னியசீர் மார்கழியில் கேட்டையின்று மாநிலத்தீர், என்னிதனுக்கேற்றம் எனிலுரைக்கேன்—துன்னுபுகழ் மாமறையோன் தொண்டரடிப் பொடியாழ்வார் பிறப்பால், நான்மறையோர் கொண்டாடும் நாள்" என்ற மாமுனிகள் பாசுரப்படி தொண்டரடிப்பொடியாழ்வாருடைய திருவவதாரத்தினால் மார்கழித் திங்களுக்கு ஏற்றம் என்பது ஒரு புறமிருக்க, அவருடைய திவ்யப்ரபந்தமான திருப்பள்ளி யெழுச்சியும், *பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும் வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழான திருப்பாவையும் திவ்ய தேசங்களிலெங்கும் மடங்களிலெங்கும் திருமாளிகைகளிலெங்கும் ஸுப்ரபாதத்தில் எம்பெருமான்கள் திருச்செவி சாற்றப் பெறுமேற்றம் நாடு நகரமும் நன்கறிந்தது. *அரங்கர்மௌலி சூழ்கின்ற மாலையைச் சூடிக் கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளலென்று போற்றப்பெற்ற எம்பெருமானார் திருப்பாவை ஜீயர் என்று புகழ்பெறும்படியான பெருமைபெற்ற திருப்பாவைக்கு அந்நாள் தொடங்கியே ஒரு பெருமையுண்டு. [அதாவது] ஆங்காங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் திருப்பாவையின் வ்யாக்யானத்தை ஒரு ஆசார்யருடைய ஸந்நிதானத்திலே காலக்ஷேபமுறையில் கேட்பதென்பது. பெரும்பாலும் திவ்ய தேசங்கள்தோறும் இது நடைபெறுவதுண்டு. சில பெரிய திவ்ய தேசங்களில் இரண்டு மூன்று இடங்களிலும் நடப்பதுண்டு. இது ஐம்பது அறுபது வருஷங்களுக்கு முந்திய நிகழ்ச்சியைத் தெரிவித்தபடி. அறுபது வருஷங்களாக அந்த முறை குறைவுற்று எங்கும் உபந்யாஸ ப்ரக்ரியை ப்ரபலமாகிவிட்டது. சென்னை

யில் எத்தனை பேட்டைகளுண்டோ அத்தனை பேட்டைகளிலும் திருப்பாவை ப்ரவசனம் நடைபெற்று வருகிறது. இங்ஙனமே சேலம், கோயம்புத்தூர் திருச்சி, மதுரை, பெங்களூர், மைசூர் முதலான பல நகரங்களிலும் நடைபெற்று வருகின்றது. இது மிகவும் மெச்சத்தக்க செயலேயாகும்.

திருப்பாவையின் நிகமனப் பாசுரத்தில் "சங்கத் தமிழ்மாலை முப்பதும்" என்றருளிச் செய்யப்பட்டுள்ளதற்கு ஸங்கம் ஸங்கமாகக் குழாங்கூடி அநுபவிக்கத் தக்க தமிழ்மாலை என்பதும் ஒரு பொருளாதலால், "குழாங்களாய் அடியீருடன் கூடி நின்றாடுமினே" [திருவாய்மொழி 2—3—11] என்று ஆழ்வார் ஸுஸ்பஷ்டமாகவே அருளியபடி பக்தர்கள் ஆங்காங்குக் குழாங்கூடி அநுபவிப்பது *செங்கண் திருமுகத்துச் செல்வத்திருமாலின் திருவருட் பெருக்கேயாகும்.

பொலிக! பொலிக!! பொலிக!!!

## சென்னையில் நமது விலாசம்

சென்னைத் தொண்டைமண்டல ஹைஸ்கூலில் நாற்பத்து மூன்று ஆண்டுகட்கு முன்பு தொடங்கப்பட்ட நமது திருப்பாவை உபந்யாஸம் அவ்விடத்தில் இருபத்தெட்டு ஆண்டுகள் நடைபெற்றுப் பிறகு கோவிந்தப்ப நாயகன் தெருவில் உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமாநுஜ கூடத்தில் நடைபெற்று வருகிறதென்பது பக்தர்கள் அறிந்தது. நாற்பத்து நான்காவது பர்யாயமாக இவ்வருஷம் நடக்கவிருக்கிறது. 15—12—73 மாலை திருப்பாவையின் அவதாரிகை நடைபெறும். மறுநாள் ஆண்டாள் திருநக்ஷத்திரமாகிய திருப்பூர நன்னாளிலிருந்து தொடர்ச்சியாக நடந்து 13—1—74ல் காலை திருப்பாவை சாற்றுமுறையும் ஆண்டாள் திருக்கல்யாணமுமாகித் தலைக்கட்டும். இந்த முப்பது நாளும் நமக்குத் தபால் விலாசம்

P. B. Annangaracharya,
Vuppattur Alwar Chettiar's Ramanuja Koodam,
48-49, GOVINDAPPA NAICKEN STREET,
MADRAS-1. Pin Code 600001

## ஓர் சிறந்த அறிவிப்பு

"எனது இரவு நினைவுகள்" என மகுடமிட்டு ஒரு பெரிய நூல் எழுத ஆரம்பித்துவிட்டேன். அதை அடுத்த பக்கத்திலிருந்து காணலாம். இது எனது வாழ்நாள் உள்ளளவும் தொடர்ந்து செல்லும். இதில் வெளிவருவன இறந்தகாலச் செய்திகளும் நிகழ்காலச் செய்திகளுமான பல்வேறு விஷயங்களாம். ஏற்கனவே எட்டு மாதங்களுக்கு முன் எழுதத் தொடங்கிய அபூர்வார்த்த ரத்ன நிதியும் இதனுடனேயே தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கும்.

இங்ஙனம்,

பத்ராதிபர்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# எனது இரவு நினைவுகள்.

(என்பால் அன்புள்ளாரனைவரும் இதைப் பூர்த்தியாக வாசிக்க வேண்டுமென்றும் தம்தம் நண்பர்களையும் வாசிக்கச் செய்ய வேண்டுமென்றும் வேண்டுகிறேன்.)

—ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்—

ஓராண்டுக்கு மேலாக அடியேனுக்கு இரவில் ஒரு கணப்பொழுதும் தூக்கம் வருவதில்லை. பகவத்கீதையில் "ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்" என்றான் கண்ணபிரான். ஒருவனும் ஒரு நொடிப்பொழுதும் "வாளா இருக்ககில்லான் என்பது இதன் பொருள். கரணங்கள் குர்வத்ரூபங்கள்" என்றும் சொல்லப்படுகிறது. இந்திரியங்கள் ஏதையாவது செய்துகொண்டேயிருக்குமியல்புடையன என்பது இதன் கருத்து. இதெல்லாம் பிறரிடம் எப்படியோ அறியேன். அடியேனிடம் அநுபவ ஸாக்ஷிகம். தூங்குகிற வேளை தவிர மற்ற வேளைகளில் ஒருநொடிப் பொழுதும் வாளா விருந்தறியேன்; இருக்கவும் முடிகிறதில்லை. எண்பத்துமூன்றாவது பிராயத்தில் இருக்கின்றவனாகிய நான் 82 பிராயம் வரையில் பகலில் படுத்தறியேன். இரவில் 5 அல்லது 6 மணிகாலம் இனிதாக உறங்குவேன். இப்போது ஒரு வருஷகாலமாக "கங்குலும் பகலும் கண்துயிலறியாள்" என்கிற ஆழ்வாரோடு ஸாம்யம் பெற்றுள்ளேன். பகல் வேளைகளில் உசாத்துணையாகச் சிலர் கிடைப்பதால் அவர்களைத் துணைகொண்டு வேண்டுவன எழுதுவித்து வருகிறேன். இராக்காலங்களில் உசாத்துணைவர்கள் கிடைப்பதரிதானதாலும் சொந்தமாக ஓரெழுத்தும் எழுதமுடியாமையாலும் ஒவ்வொரு நாளும் இராப்பொழுதைக் கழிப்பது மிகச்சங்கடமாகவே யிருக்கின்றது. இரவும் பகலும் உத்ஸவங்கள் அநுபவிக்கப்பெறும் நாள்கள் அடிக்கடி நேரமாட்டாதன்றோ? பலநாள்களாக உறக்கமின்மையாலும் வேறொன்றும் செய்யமுடியாமையாலும் நான் படும் வேதனையை என்னென்று எழுதுவது! நிமிஷந்தோறும் தோன்றுகின்ற சிந்தனைகளோ நூற்றுக்கணக்கானவை—பல நூற்றுக்கணக்கானவை அவற்றையெல்லாம் எழுதிவைக்க வேண்டுமென்று தோன்றிற்று. தோன்றும் சிந்தனைகள் எவ்விதமானவையென்றால், என்னோடு நட்புக்கொண்டவர்களும் என்னுடைய அன்புக்கிலக்கானவர்களும் நாற்றிசைகளிலும் உள்ளபடியால், அவரவர்களை நினைப்பதும், ஸமய விசேஷங்களில் அவர்களோடு நான் ஸம்பாஷித்ததும், அவரவர்களால் நான் தெரிந்துகொண்டதும் மற்றும் நூல்களிற் கண்டவையும், கண்டு நான் எழுதவேண்டியவையான விஷயங்களை விமர்சிப்பது.....ஆக இத்தகைய சிந்தனைகள் ஒன்றோடொன்று ஸம்பந்தப்படாமல் ஒன்றின்பின் ஒன்றாகத் தோன்றிக்கொண்டேயிருக்கும். என்னுடைய பேரன் செஞ்சீவி ராஜகோபாலன் என்பவன் இரவில் என்னை விட்டு அகலாமல் இருக்கிறான். அவனுக்கு வயது 12. நன்கு எழுதுகிறான். அவனைக்கொண்டு எழுதுவிக்கிறேன். பகல் வேளைகளில் செஞ்சீவி (தௌஹித்ரன்) கி.அ. அக்காரக்கனி அரங்காழ்வானைக் கொண்டும், ஸமீபத்திலிருக்கிற ஸ்ரீமான் A.K. வீரராகவாசாரியரைக் கொண்டும் ஸமயாநுகுணமாகச் மற்றும் சிலரைக்கொண்டும் எழுதுவிக்கிறேன். எனக்கு துர்முகி வருஷத்து பங்குனி விசாகத்தில் ஏழாவது பிராயம் தொடக்கமாயிற்று. அடுத்த ஹேவிளம்பி வருஷம் சித்திரை மாதத்தில் திருத்தகப்பனார் எனக்கு

உபநயனம் செய்து வைத்தார். அந்நாள் முதலாகவும் நான்காவது "பிராயம் முதலாகவும் இந்நாள்வரையிலும் நடந்த ஸம்பவங்கள் திடீர்திடீரென்று நினைவுக்கு வந்து கொண்டிருக்கும். பொய்கை யாழ்வார் தமது திருவந்தாதியில் "இடந்தது பூமி எடுத்தது குன்றம் கடந்தது கஞ்சனை முன் அஞ்ச கிடந்ததுவும் நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே" என்றொரு பாசுரம் ஸாதிக்கிறார். அது எவ்வளவு ஆச்சர்யமான பாசுரம் பாருங்கள்! இடந்தது பூமி என்றது வராஹாவதாரத்தில்; எடுத்தது குன்றம் என்றது (கோவர்த்தனோத்தாரணம்) க்ருஷ்ணாவதாரத்தில் திருவாய்ப்பாடியில் நிகழ்ந்தது; கடந்தது கஞ்சனை என்ற கம்ஸவதம் வடமதுரையில் நிகழ்ந்தது. கிடந்ததுவும் நீரோத மாகடலே என்றது க்ஷீராப்திசயனம்; நின்றதுவும் வேங்கடமே என்றது திருவேங்கடமுடையானுடைய நிற்கை. இவ்வநுஸந்தானங்களுக்கு பரஸ்பரம் என்ன சேர்த்தியுள்ளது? இவ்வாழ்வாருடைய மற்றொருபாசுரமும் சேவீர். அரவம் அடல்வேழம் ஆன்குருந்தம், புள்வாய் குரவை குடமுலை மற்குன்றம் 'கரவின்றி விட்டிறுத்துமேய்த்தொசித்துக்கீண்டுகோத்தாடி உண்டட்டெடுத்த செங்கணவன்' என்பதாம். இதில் க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்கள் பத்து பேசப்பட்டுள்ளன.

எந்த சேஷ்டிதம் முந்தினது எந்த சேஷ்டிதம் பிந்தினது என்று ஆராய முடியாது. ஆழ்வார் தாம் சொல்லவேண்டுமென்று நினைத்துச் சொன்னவையுமல்ல. திருமங்கையாழ்வார் "சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே மதிள்கச்சி யூரகமே பேரகமே பேராமருதிறுத்தான், வெள்ளறையே வெஃகாவே பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர் ஆராமம் சூழ்ந்தவரங்கம் .. " என்றோடிக்கொண்டே பாடுகிறார்; அல்லது பாடிக்கொண்டே ஓடுகிறார். சீரார் திருவேங்கடமெங்கே? திருக்கோவலூரெங்கே? காஞ்சீபுரம் உலகளந்தான் ஸன்னிதியிலுள்ள ஊரகமெங்கே? ஸ்ரீரங்கத்தருகிலுள்ள அப்பக்குடத்தான் ஸன்னிதி என்கிற திருப்பேர் நகரெங்கே? திருவெள்ளறையெங்கே? காஞ்சி யதோக்தகாரி ஸந்நிதி என்கிற திருவெஃகா எங்கே? திருவாலி திருநகரியெங்கே? [ஸ்ரீவில்லிபுத்தூர் அருகிலுள்ள] திருத்தண்காலெங்கே? [நாச்சியார் கோயிலென்கிற] திருநறையூரெங்கே? மலைநாட்டுத் திருப்புலியூரெங்கே? அல்லது சோழநாட்டிலுள்ள சிறுபுலியூரெங்கே? அங்கிருந்து திருவரங்கத்துக்குத் தாவுகிறார். இதற்கெல்லாம் ஓரடைவு காணமுடியாது. "அருவிசோர் வேங்கடம் நீர்மலையென்று வாய்வெருவுறாள். மெய்யம் வினவி இருக்கின்றாள். பெருசீர்க் கண்ணபுரமென்று பேசினாள் உருகினாள். உள்மெலிந்தாள் இது வென்கொலோ" என்பது பரகாலநாயகியின் திருத்தாயார்பாசுரம். இங்ஙனே பல்லாயிரம். ஒன்றுக்கும் அடைவு காணவியலாது.

இதுபோல அடியேனுடைய இரவு நினைவுகளும் ஒன்றோடொன்று சம்பந்தங்கொள்ளாமல் என்றைக்கோ நடந்தவையும் எங்கெங்கேயோ நடந்தவையுமான செய்திகளும், வார்த்தைகளும், அர்த்தங்களும், ஆராய்ச்சிகளும், ஓரடைவின்றிக்கே தோன்றிவருகின்றன. இது எனக்கே ஆச்சர்யமாக உள்ளது.

இடையில் ஒரு வார்த்தை. இளமையில் காவ்யநாடகாலங்காரக்ரந்தங்களில் பரிசயம் செய்துகொண்டிருந்தபோது சம்பூக்ரந்தங்களில் பாரத சம்புவும் காவியங்களில் சிசுபாலவதமென்கிற மாககாவ்யமும் நாடகங்களில் "உத்தரே ராமசரிதே பவபூதிர் விசிஷ்யதே" என்று காளிதாஸனோடொக்க கொண்டாடின உத்தரராம

சரிதத்திலும் மிக்க ருசிவிச்வாஸ முடையனாய் இருந்தேன். அந்த உத்தரராமசரிதத்தில் முதலில் இரண்டு சுலோகங்கள் அற்புதமானவை. (அவையாவன) "ஜீவத்ஸு தாதபாதேஷு நூதநே தாரஸங்க்ரஹே, மாத்ருபிச் சிந்த்யமாநாநாம் தே ஹிநோ திவஸா கதா:" என்பது ஒரு ச்லோகம் இதன் கருத்தாவது—அப்பா பிழைத்திருக்கிற காலம்! மிதிலா புரியில் விவாஹம் நடந்த காலம் அங்கிருந்து அயோத்தி வந்து சேர்ந்து தாய்மாருடைய சிந்தனையில் இருந்த காலம்! அப்பப்ப,! அப்படிப்பட்ட நாட்களல்லவோ நன்னாட்கள், அந்த நாட்களெல்லாம் கடந்து போயினவே! அவை மீண்டுவரமாட்டாவே! என்பதாம்.

மற்றொரு ச்லோகம் கேண்மின், "ஸ்மரஸி ஸுதநு! தஸ்மிந் பர்வதே லக்ஷ்மணேந ப்ரதி விஹித ஸபர்யா ஸுஸ்தயோஸ் தாந்யஹாநி, ஸ்மரஸி ஸரஸநீராம் தத்ர கோதாவரீம் வா ஸ்மரஸி ச ததுபாந்தேஷு ஆவயோ: வர்த்தநாநி" இந்த ச்லோகம் பெருமாள் [கர்ப்பிணியான] பிராட்டியை நோக்கிச் சொல்வது சீதே! ப்ரஸ்ரவண கிரியில் தம்பி லக்ஷ்மணன் உபசாரங்கள் பண்ணப் பாங்குடனிருந்த அந்நாட்கள் நினைவுக்கு வருகிறதா? கோதாவரியின் நீர்வாய்ப்பு நினைவிற்கு வருகிறதா? அந்த நதிப்ராந்தங்களில் நாமிருந்த இருப்பெல்லாம் நினைவுக்கு வருகிறதா? என்று கேட்பதன் கருத்தென்ன? 'ஆமாம், நினைவிற்குவருகிறது' என்று பிராட்டி விடையிறுக்கவேணுமென்றெண்ணியா பெருமாள் கேட்டது. இது கேள்வியாகவே கொள்ளத்தக்கதன்று. பிராட்டியோடு சித்திரகூடமலைச் சாரலில் வாழ்ந்து கொண்டிருக்கிறதுபோது "வைதேஹி ரமஸே கச்சித் சித்ரகூடே மயா ஸஹ" என்றும் பிராட்டியைக் கேட்கிறார் பெருமாள் "வைதேஹி! சித்ரகூடத்தில் என்னோடு கூடவிளையாடுகிறாயா" என்பது இதன் பொருள். இது என்ன அசட்டுக்கேள்வி என்று நமக்குத் தோன்றும். இதுவும் கேள்வியன்று. அநுபவத்தின் இனிமைகளை நினைக்கும் போது ஆநந்தப் ப்ரவாஹம் உள்ளடங்காமல் வழிந்து புறப்படும் சொற்களிவை. அத்தகைய ச்லோகங்கள் ஒன்றல்ல, பத்தல்ல, நூறல்ல ஆயிரக்கணக்கானவை நினைவிற்கு வருகின்றன. இவை போன்ற பாசுரங்களும் பல பல நினைவிற்கு வருகின்றன. அவை யெல்லாம் இந் நூலாகப் பரிணமிக்கின்றதென்று கொள்க. "தே ஹிநோ திவஸா கதா:" என்ற பெருமாளுடைய வார்த்தை அற்புதம்! மிகவற்புதம்! மிக மிகவற்புதம்! அந்த வார்த்தையையே ஒவ்வொரு நாளும் நூறுதடவை நினைத்து வருகிறேன்.

என்னுடைய வாழ்நாளில் சில சிந்தனைகள் நாடோறும் நிச்சலும் நிகழ்வனவாகும். அவற்றை முன்னம் தெரிவிக்கிறேன்.

நித்யாநந்த சிந்தனைகள்

1. முதல் சிந்தனை. நாம் அந்தணர் குலத்திலே பிறந்தோம். "அபிவாதயே ... ... யஜுஸ்சாகாத்யாயீ (அல்லது) ஸாமசாகாத்யாயீ என்று சொல்லிக் கொள்ளுகிறபடி வடமொழி வேதத்தைஓதக்கடமைப்பட்டிருக்கிறோம். ஆரியர்களான நமக்குத் தமிழ்ப்பிரபந்தங்கள் ஏதுக்கு?" என்று ஸ்ரீமந்நாதமுநிகள் நினைத்திடாமல் அரும்பாடுகள் பட்டு திவ்யப் ப்ரபந்தங்களைச் சம்பாதித்து, இன்று நாமும் அமுதமாக அநுபவிக்கும்படி அளித்திராவிடில் நம்முடைய வாழ்வு என்னாகும்! ஆளவந்தார், எம்பெருமானார், ஆழ்வான், பட்டர்போல்வாரான பேராசிரியர்கள் நாதமுநிகளின் திருவுள்ளத்தைப்பின்பற்றி அதை மேன்மேலும் வளர்த்திராவிடில் நாதமுனிகளின்

ப்ரயாஸம் தான் என்னாகும்?

2. [இரண்டாவது] கூரத்தாழ்வான் வைதிக உலகிற்கு நிதியாக அளித்தருளின பஞ்சஸ்தவத்தின் உபக்ரமத்தில் [ஸ்ரீவைகுண்டஸ்தவே]

"த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்த விபூஷணம் யத்
ஸம்பச்ச ஸாத்விக ஜநஸ்ய யதேவ நித்யம்,
யத் வா சரண்யம் அசரண்ய ஜநஸ்ய புண்யம்
தத் ஸம்ச்ரயேம வகுளாபரணாங்க்ரியுக்மம்"

"பக்திப்ரபாவ புவதத்புத பாவபந்த
ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌக பூர்ண:
வேதார்த்த ரத்நநிதி: அச்யுத திவ்யதாம
ஜீயாத் பராங்குச பயோதி ரஸீமபூமா."

இத்யாதி ச்லோகங்களையும்; பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம், ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்." "வடதளதேவகிஜடர வேதசிர: கமலாஸ்தந சடகோப வாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்" இத்யாதி ச்லோகங்களையும் அருளிச்செய்திராவிடில் ஆழ்வார்களிடத்திலும் அருளிச்செயல்களிடத்திலும் நம்முடைய ப்ராவண்யம் நிலைத்திருக்கமாட்டாதே! இப்பேராசிரியர்கள் செய்துவைத்த மஹோபகாரந்தான் என்னே! என்கிற இந்த சிந்தனை நிரந்தரமாகச்செல்லும்.

3. [மூன்றாவது சிந்தனை] நம் ஆசார்யர்கள் ஸாதித்தவை நிற்க. கம்பர் சடகோபரந்தாதியில் "அந்தமிலாமறை ஆயிரத்தாழ்ந்த அரும்பொருளைச் செந்தமிழாகத்திருத்திலனேல் நிலத்தேவர்களும், தந்தம் விழாவும் அழகுமென்னாம் தமிழோர்கவியின், பந்தம் விழாவொழுகுங் குருகூர் வந்த பண்ணவனே" என்று கூறியுள்ள செய்யுள் அடிக்கடி சிந்தனையில் வரும். இச்செய்யுளின் பொருளை அறிவீர்களே! ஆழ்வார் பாசுரம் அவதரித்திராவிடில் அந்தணர்களின் கதி என்னாகும் என்றும், ஆங்காங்கு தேவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்களின் அழகு தான் என்னாகுமென்றும் கேள்வி கேட்கிற வியாஜத்தினால்— ஆழ்வார் அருளிச் செயல்களினால் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விளைந்துள்ள சிறப்பையும் தேவாலய உத்ஸவங்களுக்கு ஏற்பட்டுள்ள வைலக்ஷண்யத்தையும் அகம் குழைந்து அனுபவித்தார் ஆகிறார். இந்த சிந்தனை அடுத்தடுத்து வருகின்றது.

[4-வது சிந்தனை] ஸ்ரீராமாயணம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், பகவத்கீதை முதலானவை போல திவ்யப்பிரபந்தங்களும் ஏட்டளவிலே நின்று புத்தக பாராயணத்தோடு நின்று விடாமல் வடமொழி வேதத்தைப் போலவே இத்திவ்யப்ரபந்தங்களையும் கண்டபாடம் செய்து செவிக்கினிய இசையுடனே ஸேவிக்கும்படி நியமித்தருளின நம் ஆசார்யர்களின் கருணை தான் என்னே என்று இதையும் அடிக்கடி சிந்திப்பேன். திருவாய்மொழியை வீதியில் ஸேவிக்கக் கூடாதென்றும் ஆஸ்தானத்தில் வீற்றிருந்தே ஸேவிக்கவேண்டுமென்றும் கட்டளையிட்டது போல, மற்ற மூவாயிரங்களையும் அப்படியே வீற்றிருந்தே ஸேவிக்கவேணுமென்றும் கட்டளையிட்டிருந்தால் திருவீதி யுத்ஸவங்கள் சிவன் கோயில்உத்ஸவங்கள் போலல்லவோ காணப்பட்டிருக்கும்! அங்

ப்ரயாஸம் தான் என்னாகும்?

2. [இரண்டாவது] கூரத்தாழ்வான் வைதிக உலகிற்கு நிதியாக அளித்தருளின பஞ்சஸ்தவத்தின் உபக்ரமத்தில் [ஸ்ரீவைகுண்டஸ்தவே]

"த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்த விபூஷணம் யத்
ஸம்பச்ச ஸாத்விக ஜநஸ்ய யதேவ நித்யம்,
யத் வா சரண்யம் அசரண்ய ஜநஸ்ய புண்யம்
தத் ஸம்ச்ரயேம வகுளாபரணாங்க்ரியுக்மம்"

"பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த
ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌக பூர்ண:
வேதார்த்த ரத்நநிதி: அச்யுத திவ்யதாம
ஜீயாத் பராங்குச பயோதி ரஸீமபூமா."

இத்யாதி ச்லோகங்களையும்; பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம், ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்." "வடதளதேவகீஜடர வேதசிர: கமலாஸ்தந சடகோப வாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்" இத்யாதி ச்லோகங்களையும் அருளிச்செய்திராவிடில் ஆழ்வார்களிடத்திலும் அருளிச்செயல்களிடத்திலும் நம்முடைய ப்ராவண்யம் நிலைத்திருக்கமாட்டாதே! இப்பேராசிரியர்கள் செய்துவைத்த மஹோபகாரந்தான் என்னே! என்கிற இந்த சிந்தனை நிரந்தரமாகச் செல்லும்.

3. [மூன்றாவது சிந்தனை] நம் ஆசார்யர்கள் ஸாக்ஷித்துவை நிற்க. கம்பர் சடகோபரந்தாதியில் "அந்தமிலாமறை ஆயிரத்தாழ்ந்த அரும்பொருளைச் செந்தமிழாகத்திருத்திலனேல் நிலத்தேவர்களும், தந்தம் விழாவும் அழகுமென்னும் தமிழார்கவியின், பந்தம் விழாவொழுகுங் குருகூர் வந்த வண்ணவனே" என்று கூறியுள்ள செய்யுள் அடிக்கடி சிந்தனையில் வரும். இச்செய்யுளின் பொருளை அறிவீர்களே! ஆழ்வார் பாசுரம் அவதரித்திராவிடில் அந்தணர்களின் கதி என்னாகும் என்றும், ஆங்காங்கு தேவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்களின் அழகு தான் என்னாகுமென்றும் கேள்வி கேட்கிற வியாஜத்தினால் — ஆழ்வார் அருளிச் செயல்களினால் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விளைந்துள்ள சிறப்பையும் தேவாலய உத்ஸவங்களுக்கு ஏற்பட்டுள்ள வைலக்ஷண்யத்தையும் அகம் குழைந்து அநுபவித்தார் ஆகிறார். இந்த சிந்தனை அடுத்தடுத்து வருகின்றது.

[4-வது சிந்தனை] ஸ்ரீராமாயணம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், பகவத்கீதை முதலானவை போல திவ்யப் பிரபந்தங்களும் ஏட்டளவிலே நின்று புஸ்தக பாராயணத்தோடு நின்று விடாமல் வடமொழி வேதத்தைப் போலவே இத்திவ்யப்ரபந்தங்களையும் கண்டபாடம் செய்து செவிக்கினிய இசையுடனே ஸேவிக்கும்படி நியமித்தருளின நம் மாசார்யர்களின் கருணை தான் என்னே என்று இதையும் அடிக்கடி சிந்திப்பேன். திருவாய்மொழியை வீதியில் ஸேவிக்கக் கூடாதென்றும் ஆஸ்தானத்தில் வீற்றிருந்தே ஸேவிக்கவேண்டுமென்றும் கட்டளையிட்டது போல, மற்ற மூவாயிரங்களையும் அப்படியே வீற்றிருந்தே ஸேவிக்கவேணுமென்றும் கட்டளையிட்டிருந்தால் திருவீதியுத்ஸவங்கள் சிவன் கோயில் உத்ஸவங்கள் போலல்லவோ காணப்பட்டிருக்கும்! அங்

# புதியதொரு திவ்ய ப்ரபந்தப் பதிப்பின் பரிசீலனம்

சென்னை திருவேங்கடத்தான் திருமன்றம் இவ்வாண்டில் பதிப்பித்த நாலாயிர திவ்யப் பிரபந்த மூலம் அத்திருமன்றத்தாரால் அனுப்பப்பட்டு நேற்று (24-11-73) நமக்குக் கிடைத்தது. பத்தெட்டு நாள் முன்னமே நமக்குச் சில நண்பர்கள் எழுதியிருந்தார்கள்—"மனம் போனபடியெல்லாம் திருத்தங்கள் செய்து வெளிவந்திருக்கிறது ஒரு நாலாயிரப் பதிப்பு" என்று. அதுதான் இது என்று தெரிந்து கொண்டேன். இதைப் பூர்த்தியாக பரிசீலனம் செய்ய இப்போது நமக்கு அவகாசமுமில்லை; நேத்ர பாடவமுமில்லை. சிற்சில இடங்களை வாசிக்கச் சொல்லிக்கேட்டு இதையெழுதுகின்றேன். முன்னம் நம்பிள்ளையினுடைய ஒரு ஸ்ரீஸூக்தியை நினைவூட்டுகிறேன். திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் முதற்பத்தில் வதரியாச்சிரமப்பதிகத்தில் (1-4-8) "தவம் புரிந்துயர்ந்த மாமுனி கொணர்ந்த கங்கை" என்றதற்கு தவம் புரிந்துயர்ந்த மாமுனி என்று பகீரதனைச் சொல்லி அவன் கொணர்ந்த கங்கை என்று நிர்வஹிப்பது தவிர மற்றொரு வகையாகவும் பொருள் கூறுவர். விச்வாமித்ரன் க்ஷத்ரியனாயிருக்கச்செய்தேயும் தவம் புரிந்து ப்ரஹ்மர்ஷித்வமாகிற உயர்த்தி பெற்றானாகையாலே தவம்புரிந் துயர்ந்த மாமுனி யென்று விச்வாமித்திரனைச் சொல்லுகிறது. அவன் கொணர்ந்த கங்கை யென்றது—ஸ்ரீராம லக்ஷ்மணர்களைத் தன்னுடைய யஜ்ஞரக்ஷணார்த்தமாக அழைத்துக்கொண்டு போவபோது கங்கையின் வரலாறுகளைச் சொல்லிக்கொண்டே கங்கைக்கரைமேல் அழைத்துக்கொண்டு போயினனாதலால், தவம் புரிந்துயர்ந்த மாமுனியினால் (ஸ்ரீராம லக்ஷ்மணர்களைத் தன் கரைமீது கொண்டு வரப்பெற்ற கங்கை என்பதாக இப்பொருள் கொள்வது அரிய வழி யென்றெண்ணின ஸ்ரீபராங்குச் தாஸரென்பவர் "மாமுனி புகன்ற கங்கையின் கரை மேல்" என்று பாடந்தைத் திருத்திக்கொண்டால் நன்றாகுமே என்றாராம்; அதை நம்பிள்ளை கேட்டருளி "உள்ள பாடத்திற்கு நாம் பொருளுரைக்கக் கடமைப்பட்டிருக்கிறோமேயன்றி: இல்லாததொரு பாடத்தைக் கற்பிக்க வல்லோமல்லோம்" என்றருளிச் செய்தாராம்.



## நல்லுரைக் கோவையில் ஓர் பகுதியின் அநுவாதம்

உலகப்ரஸித்தரான கீர்த்தி மூர்த்தியான தாக்ஷிணாத்ய கலாநிதி மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள் நல்லுரைக் கோவை யென்றொரு புத்தகமெழுதி வெளியிட்டுள்ளார். அதில் நாலாம்பாகத்தில் (பக்கம் 152 to 159) வெளியிட்டுள்ளவற்றை அப்படியே இங்கு அநுவதிக்கிறோம். (அதாவது)

மதுரையிலிருந்த ஓர் ஐரோப்பியர் தமிழில் விருப்பங்கொண்டு ஒரு பண்டிதருடைய உதவிபெற்றுப்படித்து தமிழ்ச் செய்யுட்களுக்கு ஒருவாறு பொருள் தெரிந்து கொள்ளுமறிவைப் பெற்றபின்பு தமிழில்மிகச் சிறப்பான நூல் யாதென்று விசாரித்து திருக்குறள் ஒப்பற்ற நூலென்றறிந்து அதனைப்படித்தார்; இலக்கண நூலையும் இடையிடையே பயின்றுவந்தார். போப்பையரிலக்கணத்தையும் யாப்பிலக்கண வசனத்தையும் படித்து அசை சீர் தளை தொடை என்பவற்றை ஒருவகையாகத் தெரிந்துகொண்டார். அதனால், தாம்படித்த நூல்களிலுள்ள செய்யுட்களில் எதுகை மோனை சரியாக அமைந்திருக்கின்றனவாவென்று ஆராயத்தொடங்கினார். ஒரு சமயம் திருக்குறளில் "தக்கார் தகவிலரென்பதவரவர் எச்சத்தாற் காணப்

படும்" என்ற குறளில் எதுகை நன்றாக அமையவில்லையே யென்றெண்ணினார். எச்சமென்பதற்கு மக்களென்று பொருளென்று அறிந்துகொண்ட பிறகு 'ஏன் மக்களென்றே அதை மாற்றிவிடக்கூடாது? இப்படிச் செய்தால் எதுகை அழகாக அமையுமே' என்றெண்ணித் தம் புத்தகத்தில் அவ்வாறே திருத்திக்கொண்டார்; திருக்குறளைத் திருத்திவிட்டோமென்ற எண்ணத்தால் அவருக்கு மிக்க மகிழ்ச்சி யுண்டாயிற்று. இப்படியே மேலும் மேலும் சில குறள்களைத் திருத்தினார். தமக்குப் பாடஞ்சொல்லும் பண்டிதரிடம் அந்தத் திருத்தங்களைக் காட்டி இந்தத் திருத்தங்கள் மிக அழகாக இல்லையா? என்று கேட்டார். அதற்கு அவர் 'நான் உங்களைச் சேர்ந்தவனாதலால் நான் கொடுக்கும் அபிப்ராயத்தை மற்றவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்; வேறு சிலர் உடன்பட்டால் தங்கள் திருத்தத்துக்குக் கௌரவ முண்டாகும்' என்று சொல்ல, ஐரோப்பியர் தம் திருத்தங்களை யாரிடம் காட்டலா மென்று ஆராய்ந்த பொழுது கும்பகோணம் காலேஜில் பண்டிதராக இருந்த தியாகராச செட்டியார் அந்தத் திருத்தங்களை ஏற்றுக்கொண்டால் மற்றப் பண்டிதர்களும் உடன்படுவார்களென்றறிந்து செட்டியார் உபகாரச்சம்பளம் பெற்று உறையூரில் இருக்கிறாரென்றுமறிந்து சில பெரியார்களின் உதவியைக்கொண்டு உறையூர் வந்து சேர்ந்தார். ஸ்ரீதியாகராச செட்டியார் உறையூரிலுள்ள பெரிய தெருவில் அண்ணாமலை செட்டியாரென்பவரது வீட்டில் இருந்து வந்தபடியால் ஐரோப்பியர் அங்கேவந்து சேர்ந்தார் பெரியதொரு வண்டியில். அவர் வெள்ளைக் காரரா யிருந்தபடியாலும் சிறந்தவண்டியொன்று வந்தபடியாலும் அங்குள்ளவர் வியப்பு மேலிட்டுப் பெருங்கூட்டமாய் வண்டியைத் தொடர்ந்து வந்தார்கள்.

தியாகராச செட்டியார் சிவ பூசையை முடித்து உணவருந்திவிட்டு வழக்கப் படியே கையில் ஒரு விசிறியுடன் வந்து இளைப்பாறுதற்கு அப்பொழுதுதான் வெளித்திண்ணையில் அமர்ந்திருந்தார். துரையுடன் வந்தவர்களுள் ஒருவர் வண்டியி லிருந்து இறங்கி வந்து செட்டியாரிடம் 'ஒரு பெரிய துரை வந்திருக்கிறார், உங்களைப் பார்க்கவேண்டுமாம்; அவரை வரவேற்று நாற்காலிபோட்டு இருக்கச்செய்யுங்கள்' என்றார். செட்டியார், 'துரையா? வரட்டுமே, இங்கே நாற்காலி இல்லை இந்தத் திண்ணையிலேதான் உட்காரவேண்டும்' என்றார். கும்பகோணம் காலேஜில் எவ்வளவோ துரைகளைப் பார்த்தவர் செட்டியார்; அன்றியும் செட்டியாரைப் பார்க்கப் பல துரைகள் வந்து செல்வதுண்டு. ஆதலின் அவருக்கு இந்தத் துரை வந்தது ஒரு பெரிய சிறப்பாகத் தோன்றவில்லை. துரை வண்டியை விட்டிறங்கி வந்து திண்ணையிலமர்ந்தார். 'தாங்கள் வந்தது எதன் பொருட்டு' என்று செட்டியார் கேட்க, துரை, 'நான் திருக்குறளைத் திருத்தியிருக்கிறேன், உங்களுடைய அபிப்பிராயத்தைப் பெற்றுப் போக வந்தேன்' என்று கூறத்தொடங்கினார். அந்த வார்த்தைகளைக் கேட்டது செட்டியாருக்கு இடிவிழுந்தது போலிருந்தது. 'என்ன, திருக்குறளையா திருத்தினீர்கள்'? என்று வியப்பும் கோபமும் நிறைந்த தொனியிற் கேட்டார்.

"ஆமாம்; எதுகை மோனை சில விடங்களில் சரியாக இல்லை; அவை அமையும்படி திருத்தினேன்; 'தக்கார் தகவிலரென்பதவரவர், எச்சத்தாற் காணப்படும்' என்பதைவிட 'தக்கார் தகவிலரென்பதவரவர், மக்களாற் காணப்படும்' என்பது எதுகை நயத்தோடு கூடி எவ்வளவு அழகாக இருக்கிறது பார்த்தீர்களா?" என்றார் துரை

செட்டியார் எழுந்து நின்றார்; தலையிலே இரண்டடியடித்துக்கொண்டு காதைப்பொத்திக்கொண்டார். 'ஐயையோ! குறளையா திருத்தினீர்? அது மதிப்புள்ள பழைய நூலாயிற்றே; இவ்வளவு நாளாக அறிவாளிகள் செய்யாதவொன்றைச் செய்துவிட்டதாக எண்ணமோ! எச்சமென்னும் சொல்லின் பொருள் மக்களென்பதற்கு உண்டா? ஒருவருக்குப் பிறகு அவருடைய குணமுதலியவை எஞ்சி நிற்கும் சந்ததியென்று காரணத்தைப் புலப்படுத்தும் சொல்லல்லவா எச்சமென்பது? அவ்விடத்தில் அச்சொல் அமைந்ததனாலுண்டாகும் பொருட் செறிவு மக்களென்னும் சொல்லாலுண்டாகுமா? ஒரு பொருளையே தரும் பல சொற்கள் தமிழில் இருந்தாலும் அவை ஒன்றற்கொன்று சிறிது சிறிது வேறுபட்ட பொருளுடையனவாக இருக்கும். அவற்றை இடமறிந்து பெருங்கவிஞர்கள் உபயோகிப்பார்கள். அது தெரியாமல் திருத்திவிடலாமா? எதுகை நயத்தைவிடப் பொருள் நயமல்லவா சிறந்தது?'' என்று சொல்லிவிட்டு ''திருக்குறளைத் திருத்தினவர் முகத்தில் விழிப்பது கூடப் பாவம்'' என்று கூறிக்கொண்டே உள்ளே சென்று கதவைத் தாழிட்டுக்கொண்டு இடைகழித்திண்ணையில் அமர்ந்து விட்டார். துரைக்கு இன்னது செய்வதென்று தோன்றவில்லை. உடன் வந்தவர்கள் ஜன்னல்வழியாகச் செட்டியாரிடம் 'இவர் பெரியமனிதர், இப்படி இவரைத் தாங்கள் அவமதிக்கக்கூடாது; இவரால் உங்களுக்குப் பெரிய லாபமுண்டாகும்' என்றார்கள். அதற்குச் செட்டியார் 'இவரை யாரையா இங்கே வரச்சொன்னார்? உலகமெல்லாம் புகழும் திருக்குறளைத் திருத்திய இச் செயல் திருவள்ளுவரை அவமதித்த காருமல்லவோ? தெய்வம்போல யாவரும் கொண்டாடும் அவருடைய குறள் வேதமல்லவா? அதைத் திருத்தத் துணிந்தவர் வேறு என்னதான் செய்யமாட்டார்? இவருக்கு மதிப்பு எங்கிருந்து வரும்? இவரால் எனக்கு ஒரு லாபமும் வேண்டாம். இனிமேல் நான் சம்பாதித்து யாருக்குக் கொடுக்கப்போகிறேன்? எனக்குப் பிள்ளை குட்டிகள் இல்லை. போதும் போதும். உங்கள் துரையை அழைத்துக்கொண்டு போய்விடுங்க'ளென்றார். தாம் என்ன கூறினாலும் செட்டியார் வழிக்கு வாராரென்பதை யுணர்ந்த அவர்கள் துரையை யழைத்துக்கொண்டு மீண்டு சென்றார்கள்.

(இவ்வளவும் சாமிநாதஐயரவர்கள் எழுதியதின் அநுவாதம்.)

திவ்யப்ரபந்தங்கள் 'தமிழ்வேதமெனப்படுபவை. ஸ்ரீமந் நாதமுனிகள் காலந் தொடங்கி ஸ்ரீவைஷ்ணவப்பேராசிரியர்களால் பொன்னேபோல் போற்றப்பட்டு வடமொழி வேதம்போல் அத்யயன பரம்பரையில் ஓதப்பட்டு வருகின்றன. இதில் அநதிகாரிகள் கை வைப்பது மிகவும்தவறு. அருளிச்செயல் மூலத்தையும் வ்யாக்யானங்களையும் குருமுகமாக ஓதியுணர்ந்தவர்களே இத்தகைய பணியில் கை வைக்க வேண்டும். அப்படிப்பட்ட ஒருவரும் இப்பதிப்பில் அந்வயங் கொண்டதாகப் புலப்படவில்லை. அச்சுக்கூடங்கள் ஏற்பட்ட காலந்தொடங்கி இன்றளவும் ஏறக்குறைய இருபதுபதிப்புக்கள் திவ்யப்ரபந்தங்களுக்கு அமைந்துள்ளன. ஏற்கனவே பதிப்பித்தவர்களில் பேராசிரியர்களிடம் காலக்ஷேப முறையில்கேட்டு மூலத்தைக் கண்டபாடமும் செய்து பயபக்தியுடன் பதிப்பித்தவர்களுமுள்ளனர். இன்றாக ஒருவர் பதிப்பிக்கத் தொடங்கி, பாடபேதங்கள் காட்டவிரும்பினால் தாம் கண்ட பாடபேதங்களைக் குறிப்பிடலாமேயல்லது தம் மனம்போனபடி புதிய பாடத்தைக் கற்

பணிசெய்து அதை முக்யமான பாடமாக் வெளியிட்டுவிடுவது மிக்கஸாஹஸம். இதற்கு உதாரணமாக இப்பதிப்பில் பலபல காட்டலாம். நமக்கு இதுவேயா பணி? உலகம் தெளியச் சிலகாட்டுவோம்.

### தார்க்கிளந்தம்பிக் கரசீந்து

பெரியாழ்வார் திருமொழியில் (3-9-8) "தார்க் கிளந் தம்பிக் கரசீந்து" என்கிற பாசுரத்திற்கு பூர்வாசார்ய வ்யாக்யானம்—"(தார்க்கு இளந்தம்பிக்கு) மாலையிட்டு ராஜ்யம் பண்ணுகைக்கு.......................... இத்யாதி பங்க்திகள் உள்ளன. இதனால் மாலையென்னும் பொருளதான 'தார்' என்னும்சொல்லே ஆழ்வார் திருவாக்கில் வெளிவந்தது என்பது வெளிப்படை. இப்பதிப்பில் 'தார்' என்கிற சொல்லை அடியோடுதள்ளி "தாற்கு" என்றிட்டு "தான் + கு = தாற்கு— தனக்கு" என்று அநுவாதம் செய்யவும் தகாத குறிப்புரை இட்டுள்ளது. இங்ஙனே திருத்தினவரின் கருத்து என்னவென்றால் அடுத்த அடியின் தொடக்கம் "நூற்றவள்" என்றிருப்பதால் அதற்கேற்ப 'தாற்கு' என்றிருக்கவேண்டுமென்று. மற்ற மேலிரண்டடிகள் எங்ஙனே இருக்கின்றதென்பதை இவர் கண்டிலர். சூர்ப்ப, ஆர்க்க என்று தொடங்குவன மேலடிகள். திருவாய்மொழியில் மின்னிடை மடவார் பதிகத்தின் ஈற்றுப் பாசுரமாகிய (6-2-11) "ஆய்ச்சியாகிய அன்னையால்" என்பதில் இரண்டாமடி 'சீற்ற முண்டழு' என்பது. மற்ற மூன்றடிகளில் [illegible] எதுகை கிடையாது. (ஆய்ச்சி, ஏத்திய, காத்தன்னால்.) இவ்விடத்தை ஏன் திருத்தவில்லையோ? பெரியாழ்வார் திருமொழியில் *ஆற்றிலிருந்து பதிகத்தில் (2-10 5) ஆய்ச்சியர், பேர்த்தவர், வேய்த்தடம், ஆப்புண்டு என்று தொடங்கும் அடிகளைக் கொண்டுள்ளது பாசுரம். இங்கு எதுகை நயம் நோக்கித் திருத்த வேண்டாவோ? திருப்பாவையில் "மாரிமலை முழைஞ்சில் பாசுரத்தில் ரகர எதுகையே உள்ளது. அதில் ஐந்தாமடி "போதருமா போலே. என்றும் ஆறுமடி 'கோயில்' என்றும் தொடங்குவன. இங்கும் எதுகை நயம் நோக்கித் திருத்தியிருக்கவேண்டுமிவர்கள். இங்குப் போதருமாபோலே என்பதைப் 'போருமாபோலே' என்றே திருத்திச் சிலர் பதிப்பித்து விட்டார்கள். 'போதுமா போலே' என்பதில் பொருட்குறை யொன்றுமில்லை. அந்தத்திருத்தத்தை இவர்கள் ஏன் ஆதரிக்க வில்லையோ?

### வித்துவக்கோடு பற்றின விளக்கம்

குலசேகராழ்வாரொருவருடைய மங்களாசாஸனம் பெற்றது திருவித்துவக்கோடு. வடமொழியில் "வித்வத்க்ரோடம்" என்று பெயர் பெற்ற தலமிது. இதை வித்துவக்கோடு என்றே ஆழ்வார் வழங்கினர். நமது பெருமாள் திருமொழி திவ்யார்த்த தீபிகையில் 'தருதுயரம் தடாயேல்' என்னும் முதற்பாட்டின் உரையில் நாம் எழுதியிருப்பதாவது. "வித்துவக்கோடு என்பதற்கு வித்வான்கள் கூடிய இடம் என்று காரணப் பெயர் கூறுவர். பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் நூற்றெட்டுத்திருப்பதியந்தாதியில் 'திருவிற்றுவக்கோடு சேர்ந்தார் பிறவி, கருவிற்றுவக்கோடுங்காண்' என்றிருப்பதனால், வித்துவக்கோடு அல்ல விற்றுவக்கோடு "என்பர் சிலர். அவ்விடத்திலும் 'திருவித்துவக் கோடு' என்றே பாடமென்பர் பெரியோர். இவ்வளவால் எதுகையின்பம் குன்றாது. இத்திருமொழியின் ஈற்றுப்பாசுரத்திலும் இங்ஙனமே பாடமாம். இத்திவ்யதேசம் மலைநாட்டில் 'திருமிற்றக் கோடு' என வழங்கப்படுகின்றது." என்று.

ஒற்றோடு கூடிய றகரத்திற்கும் ஒற்றோடுகூடின தகரத்திற்கும் எதுகை நயத்தில் வாசியில்லை என்பதை மேலே காட்டிய திருவாய்மொழிப் பாசுரத்தினால் உணர்க. (சீற்றமுண்டழு. ஏத்திய, நாத்தன்னால்) ஆகவே, விற்றுவக்கோடு எனத் திருத்துவது ஸாஹஸம். இத்தகைய ஸாஹஸத் திருத்தங்கள் மலிந்துள்ளன இப்பதிப்பில். அவச்யமாகத் திருத்த வேண்டிய பாடங்கள் நமது தீபிகையுரையில் கண்ணாடி போல் காட்டப்பட்டிருந்தும் திருத்தப்படாமல் விடுபட்டுள்ளன. பெரியாழ்வார் திருமொழியில் (2·1·8) "வாளாவாகிலும் பாசுரத்தின் ஈற்றடி "காளாயுன்னையறிந்து கொண்டேன்' என்பதாக வழங்கி வருகிறது. பெரிவாச்சான் பிள்ளை அருளிச் செய்திருந்த பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம் நானூறு பாசுரங்கள் வரையில் செல்லரித்துப் போன படியால் அப்பாசுரங்களுக்கு மணவாளமாமுனிகள் உரை பூர்த்திசெய்தருளினர் என்பது ப்ரஸித்தம். மாமுனிகள் பொய்யிலாத மணவாள மாமுனிகளாதலால் அவரிடத்தில் அஸாதாரணமான தொரு ப்ராமாணிகத்வமுள்ளது. (அதாவது) சிலபாடங்களில் விசேஷ உபபத்தி இல்லாமலிருந்தாலும் அதிகமான அநுபபத்தி இல்லையாகில் பெரியார்கள் ஆதரித்திருக்கக் கண்டால் அதைத்தள்ளி விடாமல் கொள்ளுவதென்பது. இப்பான்மையை அவரது ரஹஸ்ய வ்யாக்யானங்களில் காண்பது தவிர இராமாநுச நூற்றந்தாதியுரையில் விசேஷமாகக் காணலாம். ஸர்வாத்மநா அநுபபந்நமான பாடமாயிருந்தால் இதுபாடமன்று என்று மறுத்தருள்வர். ஏதேனும் ஒருவழியால் உபபத்தி கூறத் தக்கதாயிருந்தால் அப்பாடத்தை முன்னங்கொண்டு உபபத்திமிக்க பாடத்தையும் கூடவே காட்டியருள்வர். மேலேயெடுத்த "வாளாவாகிலும் பாசுரத்தில் "நந்தற்கு ஆளாவுன்னை" என்பது தான் உபபத்திமிக்க பாடம். ஆனால் மாமுனிகளின் காலத்தில் சில பெரியார்கள் 'நந்தன் காளாய்' என்றும் ஸேவித்துக்கொண்டிருந்தனர் போலும்! அதில் பொருட்பிசகு ஏதுமில்லையாதலால் தமது வ்யாக்யானத்தில் அதனை முந்துற முன்னம் கொண்டார். பிறகு உபபத்தி மிக்கபாடத்தையும் காட்டியருளினர். இவ்வுண்மை உலகுக்குத் தெரியவேண்டுமென்றே இங்கு இவ்வளவு விவரித்தோம். இப்பாசுரத்தின் நமது திவ்யார்த்த தீபிகையில் எழுதியிருப்பன கேண்மின். "நந்தன்காளாய் என்பது வழங்கி வரும் பாடம். ஸ்ரீநந்தகோபர் பிள்ளையான 'நீ' என்ற வியாக்கியானம் காண்கிறபடியால் இப்பாடம் கொள்ளத் தக்கதே. மேல், 'அன்றிக்கே' என்று தொடங்கிக்காண்கிற நிர்வாஹததுக்கேற்ப "நந்தற்குஆளா" என்று பாடமோதுதல் சிறக்குமென்க. இங்கு 'நந்தகோபருக்கு ஆள்பட்டவனே' என்றது விபரீத லக்ஷணையால், அவர்க்கு ஆட்படாதொழிந்தவனே! என்ற பொருளைத்தரும்; இத்தீமைகளை நீ செய்யத் துணியாதபடி அவர் உன்னைத் தனக்கு ஆட்படுத்திக் கொள்ளவொழியவேயன்றோ, நானிப்படிப் பழி கேட்டுப் பரிபவப்பட வேண்டிற்றென்று விரிக்க. "அவர் உன்னை நியமித்து வளர்க்காமையிறே நீ இப்படி தீம்பனாய்த தென்னுதல்" என்ற மணவாள மாமுனிகளுரைக்குக் கருத்து இதுவேயாகுமென்க. அன்றியும் "நந்தன் காளாய்" என்ற பாடத்துக்கு ஓர் அநுபபத்தியுண்டு; இத்திருமொழியில் "இறுதிப்பாடலொன்றொழிய மற்ற எல்லாப் பாட்டுகளிலும் ஈற்றடியின் முதற்சீர் முதலெழுத்து மோனையின்பத்துக்கிணங்க அகரமாகவே அமைந்திருத்தலால் இப்பாட்டொன்றில் மாத்திரம் அது மாறுபடுதல் குறையாமாறு காண்க. நந்தற்கு ஆளா என்றே ஆன்றோர் பாடம்."

—(இவ்வளவும் நமது தீபிகையுரை யநுவாதம்) இப்பாடத்தில் வியாக்கியானப் பொருத்தமும் இங்குக் காட்டப்பட்டது. இப்போது நாம் பரிசீலனை செய்யும் பதிப்பில் சுவையற்ற சில ஆராய்ச்சிகள் உள்ளனவேயன்றி இத்தகைய ஆராய்ச்சி சிறிதும் புகவில்லை.

### நீண்டவத்தைக் கருமுகிலைபெம்மான் தன்னை.

பெரிய திருமொழியில் (2 5-2) "நீண்டவத்தைக்கருமுகிலை" என்றவிடத்து நீண்டவத்தை என்பது முக்கியமாகக் கொள்ளப்பட்ட பாடம். நீண்ட அத்தக் கருமுகிலை என்பது வ்யாக்யானத்தில் பாடாந்தரமாகக் காட்டப்பட்டது. இதை நமது தீபிகையில் விவரித்திருக்கிறோம். எங்கும் ஸேவிக்கும் பாடம் 'நீண்டவத்தை' என்பதேயாம். இப்பாடம் இப்பதிப்பில் புகவே இல்லை. பெரிய திருமொழி மூன்றாம் பத்தில் (3-2 9) "பெருநீர் நிவாவுந்தி முத்தங்கொணர்ந்து எங்கும் வித்தும் வயலுள்" என்ற விடத்து எங்கும் என்கிற சொல் வேண்டாமென்று இப்புதிய பதிப்பில் தள்ளப்பட்டுள்ளது. அச்சொல் இல்லாமலே சீர்கள் ஒழுங்குபட்டு விடுவதால் அது தள்ளப்படலாம் என்பது இவர்களின் எண்ணம். இதுவும் ஸாஹஸமான செயல். பெருநீர்—நிவாவுந்தி—முத்தம்—கொணர்ந்து என்று நான்கு சீர்கள் பிரித்து விட்டால் எங்கும் என்பது வேண்டாததே என்று தோன்றும். கொணர்ந்து என்பது புளிமாச்சீர். கொணர்ந்தெங்கும் என்கிற வரையில் கொண்டால் அது புளிமாங்காய்ச் சீர். காய்ச்சீர் மாச்சீர்கள் எங்கும் விரவி வருவதைக் காணுநின்றோம். உலகமெங்கும் ஸமரூபமாக வழங்கிவரும் பாடத்தில் நான்கெழுத்துக்களை அடியோடு தள்ளிவிடுவது ஸாஹஸம். பெரிய திருமொழியிலேயே காழிச்சீராம விண்ணகரப் பதிகத்தில் (3-4-2) "தொல்குருகு சினையெனச் சூழ்ந்தியங்க எங்கும்" என்றவிடத்து நம்முடைய விரிவான ஆராய்ச்சிக் கட்டுரையை இவர்கள் கண்டிலர்.

### திவ்யப்ரபந்தத் தனியன்களில் வெண்டளை யாராய்ச்சி.

திவ்யப்ரபந்தத் தனியன்கள் மூன்றில் வெண்டளைக்குத் தவறான பாடங்கள் நெடுங்காலமாக வழங்கிவருகின்றன. திருமாலைத் தனியனில் "தொண்டரடிப் பொடி யெம்பெருமானை" என்றவிடத்தும், முதல்திருவந்தாதித் தனியனில் "அருந்தமிழ் நூற்றந்தாதி" என்றவிடத்திலும், பெரியதிருவந்தாதித் தனியனில் "வந்தித்து வாயாரவாழ்த்தி" என்றவிடத்திலும் தளை பிறழ்ந்திருப்பதைக் காண்கிறோம். இம்மூன்றிடங்களிலும் நமது தீபிகையுரையில் ஆராய்ச்சியுள்ளது "தொண்டரடிப் பொடி யெம்பெருமானை" என்றவிடத்தில் நமது ஆராய்ச்சியை இவர்கள் சிறிதும் கண்டிலர். எங்கும் வழங்கும் பாடத்தையே பதிப்பித்துள்ளார்கள். "அருந்தமிழ் நூற்றந்தாதி" என்றவிடத்தில் அநுபபத்தியையும் உபபத்தியையும் விளக்கி அருந்தமிழ் நூற்றந்தாதி என்னும் பாடத்தையே நாம் கொண்டோம். இவர்கள் துணிந்து "அருந் தமிழந்தாதி" என்று பதிப்பித்து விட்டார்கள். பெரியதிருவந்தாதித் தனியனில் "வந்தித்து வாயார வாழ்த்தி" என்று எங்கும் வழங்கும் பாடத்தையே பதிப்பித்து, தீபிகையுரையில் தளைவிசாரம் செய்து "வாழ்த்தியே" என்று பாடமிருந்திருக்கலாம் என்றெழுதியிருந்தோம். அதையே இவர்கள் பாடமாகப் பதிப்பித்துவிட்டார்கள். இவர்கள் தான் ஆராய்ச்சி வல்லுநர்களாயிருந்தால் 'வாழ்த்தியே" என்றுதிருத்தாமல் "வழுத்தி" என்று பதிப்பித்திருக்

வமைதி' என்னும் தலைப்பில் மனம்போனபடி எல்லாம் பல திருத்தங்களைச் செய்து வந்தார். அவற்றை மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையிலும் வெளியிட்டு வந்தார். அப்போது நாம் செந்தமிழ் ஆராய்ச்சி என்னும் நூலை எழுதி வெளியிட்டு அவருடைய தவறான திருத்தங்களையெல்லாம் மறுத்திருக்கிறோம். 'மு. ராகவையங்கார் என்று கையெழுத்திடுகின்ற நீர் முட்டாள். ராகவையங்கார் என்று கையெழுத்து இடும்படி செய்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி அப்படியே செய்து முடித்திருக்கிறான். அந்த நபர் இங்கு பாம்பார் வாய்க்கைவிடல் பார்த்தி என்று திருத்தம் செய்யலாமென்று எழுதியிருந்தார். அந்தத்திருத்தத்தை இவர்கள் சிரமேற் கொண்டுள்ளார்கள். பாம்பார்வாய்க்; கைவிடல்பார்த்;தி என்று சீர் பிரிக்கலாம் என்பது இவர்களுடைய நோக்கம். இப்போது வெண்பாவின் நியதிக்குக் குறையில்லை என்பது உண்மை. இப்படி அவரவர்கள் மனம் போனபடி எல்லாம் திருத்துவதற்குத் தமிழ் வேதம் இலக்காகுமோ? வடமொழி வேதத்தில் தைத்திரிய உபநிஷத்தில் சில பாடபேதங்கள் உண்டு. திராவிட பாடமென்றும் ஆந்திரபாடமென்றும் இரு வகை உண்டு. வேதபாஷ்யகாரரான வித்யாரண்யர் இங்குத்தாம் திராவிடபாடப்படியே பாஷ்யம் செய்வதாகக்கூறி அப்படியே செய்துள்ளார். எங்கும் வழங்காத பாடத்தைச் சிலர் தங்களுக்கு ஆராய்ச்சி வல்லமை உண்டென்று கொண்டு மனம்போனபடி எல்லாம் திருத்தினால் அது காசுக்கும் உதவாது என்பதை நாம் பல கால் எழுதியுள்ளோம். அருளிச்செயல் நடமாடும் இடங்களிலெல்லாம் நாம் ஸஞ்சாரம் செய்திருக்கிறோம். ஆங்காங்கு திவ்ய ப்ரபந்தம் ஸேவிப்பவர்களோடு கலந்து பழகிப் பெரியார்களாக உள்ளவர்களின் திருவாக்கில் வரும் பாடங்களைக்கேட்டுத் திருத்தங்கள் செய்து கொண்டு இருக்கிறோம். ஓரிடத்திலும் நாம் நம் மதிக்கேற்றபடி திருத்தம் செய்ததில்லை. இதை நமது திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில் பல விடங்களிற் காணலாம்.

"பாம்பார்வாய்க் கைநீட்டல் பார்த்தி" என்கிற பழைய பாடத்தைத்தள்ளி "கைவிடல் பார்த்தி" என்றதொரு புதிய பாடத்தைக் கொண்டதோடு நில்லாமல் கீழே காட்டியுள்ள ஒரு குறிப்புரை என்னவென்றால் "இதுவே வியாக்யானத்திற்கும் வெண்டளைக்கும் ஒக்கும்" என்பதாக. இது ஒரு பெரியமருள் அல்லது ஏமாற்றம். பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் கைநீட்டல் என்னும் பாடமே கொள்ளப்பட்டிருப்பது வ்யக்தம். இப்பாடம் வெண்டளைக்குச் சேராததென்று காட்டியிருப்பது தவறு. காய்முன்நேரும் மாமுன் நிரையும் விளமுன நேரும் வருவது வெண்டளை" என்னப்பட்ட வெண்டளை இலக்கணம் கை நீட்டல் என்னும் பாடத்தில் பொருந்தியேயுள்ளது. இந்தப்ரஸங்கத்தில் மற்றொன்று கேண்மின்.

## கோலப் பகல் களிறு பாசுரத்தைப்பற்றி

திருவிருத்தத்தில் "கோலப்பகல் களிறு" என்னும் பாசுரத்தின் ஈற்றடி "எம்மை நோக்குவதென்று கொலோ என்று முடிவு பெற்றுள்ளது. கட்டளைக் கலித்துறையின் நியமனப்படி ஈற்றடி ஏகார வீற்றதாக அமையவேண்டியிருக்க இங்கு ஓகார வீற்றதாக இருப்பது பொருந்தாதென்று கருதிச்சிலர் பாடத்தைத் திருத்துவர்கள். பலருடையதவறான திருத்தங்களையும் சிரமேற்கொள்வதாக நான்

முகத்திற்காட்டியுள்ள விவர்கள் இந்தத்திருத்தத்தை ஏனோ மேற்கொண்டிலர். இங்கு இவர்களது நான்முகத்தில் ப்ரஸ்தாவம் வந்தமையால் சில விஷயங்கள் எழுதுகிறோம்.

### மரியாதைக் குறைவான வார்த்தைகளைப்பற்றி

சிலபலவாண்டுகட்கு முன்பு தென்னாற்காடு ஜில்லாவில் (பண்ருட்டியோ, நெல்லிகுப்பமோ நினைவில்லை) ஒரூரில் வைஷ்ணவ மகாநாடு மிகச்சிறப்பாக நடந்தது. அதில் முதல் நாள் நான் தலைமை தாங்கிச் சபையை நடத்தினேன். அன்று உயர்திரு (தமிழ்ப் புலவர்) B.R. புருஷோத்தமநாயுடு அவர்கள் ஒரு ப்ரசங்கம் செய்யத் தொடங்கினர். அதில் ஸ்ரீவைஷ்ணவர்கள் பேசத்தகாத சில விஷயங்கள் கூறப்பட்டு வந்தன. அதைப் பொறுமையுடன் பூர்த்தியாகக் கேட்டிருக்கவில்லாத நான் இடையில் அவரை நிறுத்தச் செய்து சபையார்களை நோக்கி, "இப்போது நாயுடு அவர்கள் பேசும் விஷயங்கள் நான் செவியேற்கத் தக்கவையல்ல; நீங்களும் கேட்கத் தகாதவையென்று நினைக்கிறேன். இது காறும் அவர் கூறின விஷயங்களைப் பற்றி மறுப்பாகவே நான் சில விஷயங்களை கூறத்தொடங்குகின்றேன். நான் சொல்லுமவற்றுக்கு மறுப்புக் கூறவேணுமென்று அவர்க்குத் தோன்றினால் பிறகு அவர் இன்றோ நாளையோ தாராளமாகப் பேசட்டும் இதோ நான் பேசப் போகிறேன்" என்று சொன்ன உடனே சபையார் ஸந்தோஷத்துடன் கரகோஷம் செய்ய, நான் திவ்வியப் பிரபந்த திவ்யார்த்தங்கள் வேதநறுமணம் கமழுமவை என்பதைப் பல சான்றுகளுடன் சொல்லி வந்தேன். அப்போது அப்பெரியார் சிறிது நேரம் கழித்து சபையிலிருந்து எழுந்து சென்று விட்டார். மறுநாள் சபையில் என்ன நடந்ததோ அறியேன். அது நிற்க. அப்போது ஒன்றிரண்டு ஆண்டு வரையில் அப்பெரியார்க்கு என்மீது மாச்சரியமிருந்து வந்தது. அவரை நான் முன்னமறியேன், பிறகு விசாரித்ததில் அவர் சிறந்த தமிழ்ப் புலவரென்றும் அரசாங்கத் தொடர்புமுள்ளவரென்றும் செவியுற்றேன். அவரோடெனக்கு நெருக்கம் ஏற்படவில்லை. ஒரு நாள் அவர் தனது நண்பர்களிடம், "காஞ்சீபுரம் ஸ்வாமியின் நூல்களெல்லாம் எனக்குக் கிடைக்கும் வழி செய்யவேணும்" என்றாராம். அதை அவர்கள் எனக்குத் தெரிவிக்க உடனே எனது பல பல நூல்களை அவர்க்கே நேராக அனுப்பினேன். பிறகு ஒரு சமயம் அவரைச் சந்திக்க நேர்ந்த போது, 'அரசாங்கத் தாருடைய ஆதரவு கொண்டு ஆசார்யஹ்ருதயவியாக்கியானத் தமிழாக்கம் செய்து வருகிறேன். அதற்குத் தங்களுடைய நூல்கள் எனக்குப் புரியுமுதவி அளவு கடந்தது. அச்சாகி வருகிறது; விரைவில் ஸமர்ப்பிக்கிறேன்" என்றார். அப்படியே சில நாட்கட்குப் பின் அத்தமிழாக்கத்தின் முதற்பகுதியை நமக்கனுப்பினார். அதன்முன்னுரையின் முடிவில் "காஞ்சீபுரம் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்ரீமத். உ.வே அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளுடைய நூல்கள் அடியேன் இத்தமிழ் ஆக்கத்தைச் செய்தற்குப் பேருதவியாக விருந்தன. அப்பெரியார்க்கு நன்றியறிதலோடு கூடித் திசை நோக்கித் தொழும் தீர்க்க தண்டப்ரணாமம் உரித்தாகும்" என்றெழுதி வெளியிட்டுள்ளார். இப்பெரியார் இற்றைக்கும் வாழ்ந்து வருகின்றார். இப்போது இதை நான் நினைவூட்டுவது எதற்காகவென்னில், இன்று நாம் பரிசீலனை செய்யும் திவ்வியப்பிரபந்தப் பதிப்பில் நான்முகமென்று ஒரு பகுதியிட்டு அதில் என்பெயரைப் பலகால் ப்ரசங்கித்துள்ளார்கள்

ஸ்ரீ வைஷ்ணவாசார்யர்களை ப்ரஸ்தாவிக்குமிடங்களில், ஸ்ரீமான் என்றும், உபயவே, என்றும், ஸ்வாமிகள்என்றும் எழுதுவது பொதுவான முறைமை. இவர்கள் தமது வருணத்திற்குச் சேர அவற்றை விடாது எழுதக் கடமைப்பட்டவர். ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார் என்றும் ப்ர. அண்ணங்கராசாரியர் என்றும் இவர்கள் அடுத்தடுத்து எழுதிவருகிறார்கள். இதனால் என்னுடைய கிரீடம் கழன்றுவிழுந்து விட்டதென்றோ, என்னுடைய கிரீடத்தை யிவர்கள் அபகரித்தார்க ளென்றோ நான் சினந்து எழுதுவதாக யாரும் நினையார். நெறிமுறைதவறு என்றே அதைத் தெரிவிக்கலானேன். கீழே பிரஸ்தாவித்த ஸ்ரீ. உ. வே. மு. இராகவய்யங்கா ருக்கும் எனக்கும் சிலவாண்டுகள் தொடர்ந்து வாதப்போர் நிகழ்ந்தது ஏடேறி யுள்ளது. மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பத்திரிகையிலும் ஏறியிருப்பது காணலாம். அப்போது என்மீது மாச்சரியம் சொண்ட அப்பெரியார்தாமும், "ஸ்ரீமதுபயவே செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவரான காஞ்சீபுரம் ஸ்வாமிகள்" என்றே பன்முறையும் எழுதிவந்தார்.

மேலே ப்ரஸ்தாவித்த இவர்களது நான்முகத்தில் எழுதியிருக்கும் விஷயங்கள் எனது நூல்களிலிருந்தும் உபந்யாஸங்களிலிருந்தும் கொள்ளைகொள்ளையாகக் கொள் ளப்பட்டவை என்பதை உலகமுணரும். அதற்காக இவர்கள் ஸ்ரீமான் புருஷோத்தம நாயுடுவைப்போல் நன்றிபாராட்டி எழுதவேணுமென்று நான் சிறிதும் எதிர் பார்க்கவில்லை. என் பெயரை இவர்கள் நான்முகத்தில் ப்ரஸ்தாவிக்க விரும்பினால் "பெரும்பாலும் காஞ்சீபுரம் ஸ்வாமிகளின் பதிப்பை துணை கொண்டோம்" என்று ஒரேஒருவரியோடு நிறுத்தியிருக்கவேண்டும். உண்மையும் இதுவே. இவர்களது புதிய திருத்தங்கள் பழிப்புக்கிடமானவை என்பதை விரிவுக்கு அஞ்சிச் சிறிது நிரு பித்தோம், மேலும் நிரூபிப்போம். தற்காலம் ஞாநாநுஷ்டான நிதியாய் விசே ஷித்து திவ்யப்ரபந்த ஸாகர பாரங்கதநமான ஸ்ரீமத்பரமஹம்ஸ திருக்குடந்தை ஆண்டவன் ஸ்வாமிகளுடைய மங்களாசாஸந பத்ரிகை முந்துற முன்னம் இப்பதிப்பில் வெளியிடப்பட்டுள்ளது. இதில் இந்த நான்முகத்தைப் பற்றின மகிழ்ச்சியுரை காண் கிறது. உண்மையில் இந்த மஹாஸ்வாமிகள் இந்த நான்முகத்தையுட்புகுந்து கடா க்ஷித்தருளாமலே எழுதியருளினர். இப்பதிப்பாளர் திவ்யப்ரபந்த மூல பாடங்களைப் பற்றி ஏதோ எழுதுவதோடு நில்லாமல் தங்களுக்குச் சிறிதும் நிலமல்லாத அர்த்தங் களின் பரிசிலனையிலும் புகுந்து "இவ்வர்த்தம் சுவை மிக்கது, அவ்வர்த்தம் சுவைக் கேடானது" என்றெழுதியிருக்குமவற்றை வாசித்துக் காட்டக் கேட்கும் போது நமக்கு நகைப்பே உண்டாயிற்று. நாம் நமது பத்ரிகைகளிலும் நூல்களிலும் எந்த எந்த அர்த்தங்களை அநுவாதம் செய்து, "இது தவறான அர்த்தம்; இது பூர்வாசாயர் வ்யாக்யானத்தோடு இணங்காத அர்த்தம்' என்றெழுதியிருந்தோமோ இவ்வர்த்தங் களை இவர்கள் தாமும் உதாஹரித்து (அநுவதித்து) "இவை பொருந்தாத பொருள் களே" என்றெழுதியுள்ளார்கள். இது மிகத் தகுதியற்றதாகும். என்பதைச் சுருக்க மாவும் ஸாரமாகவும்முதலிக்கிறேன்.

ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகளின் மங்களாசாஸன பத்ரிகையைப்பற்றி

தசோபநிஷத் பாஷ்ய காரரென்று ப்ரஸித்தி பெற்ற ஸ்ரீ ரங்கராமாநுஜ ஸ்வாமிகள் மஹாப்ராஜ்ஞரும் மஹாப்ராமாணிகருமாக இருக்கச் செய்தேயும் சில சில விடங்களில் தவறிவிட்டார் என்பதை உபந்யாஸகஸௌபாக்யமென்னும் எனது நூலில் "ஆனைக்கும் அடிசறுக்கும்" என்னும் மகுடத்தின் கீழ் விரிவாக வரைந்துள்

ளேன். அப்பேராசிரியர் இவர்களது ஆசாரியவகுப்பைச் சேர்ந்தவர். அதை அவர்கள் எடுத்துக்காட்டவே தகாது. அது தங்கள் கண்ணில் பட்டாலும் காணுக்கண்ணிட்டிருக்கவேண்டும். அப்படியிருக்க இவர்கள் அந்த நூல் முகத்தில் முன்னோருரைகளுக்கு முரணுகப் பின்னோர் எழுதும் உரைகள் ஏற்கத்தகாதவை என்று எழுதுமடைவிலே "எல்லீரும் வீடு பெற்றூர் உலகில்லையென்றே" என்ற விடத்திலும் ஆதியஞ்சோதியுருவை என்கிற விடத்திலும் நாம் பலமுறையும் காட்டியிருந்த தவறுகளை அப்படியே எடுத்தெழுதி விட்டார்கள். அத்தவறுகள் தம்வகுப்பினர்க்குப் பரமாதரணீயரான உபநிஷத் பாஷ்யகாரருடையவை என்பதை இவர்கள் அறிந்திலர். இவர்களறியாவிடினும் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகள் நன்கு அறிந்தேயிருப்பர் அவர்கள் இந்த நூன் முகத்தைக் கடாக்ஷித்திருப்பர்களாகில் உடனே கிழித்தெறிந்திருப்பர். இது மட்டுமேயன்று. இவர்கள் துணிந்து மாற்றியுள்ள பல பாடங்களையும் அந்த ஸ்வாமிகள் கடாக்ஷித்திருப்பரேல் சினந்து கடிந்தேயிருப்பர். அதனையும் மேலே விவரிக்கிறேன்.



மேலே ப்ரஸ்தாவித்த ரங்கராமானுஜ ஸ்வாமிகள் ஆதியஞ்சோதியுருவையங்கு வைத்திங்குப் பிறந்த என்பதற்கு எழுதின அர்த்தமும், எல்லீரும் வீடு பெற்றால் உலகில்லையென்றே என்ற விடத்தில் அவர் எழுதிய அர்த்தமும் சுவைக் கேடானது என்பதை இவர்களே எழுதிவிட்டார்கள். மற்றுஞ் சில விடங்களிலும் அவர் தவறாக எழுதியிருப்பவற்றை நாம் நமது நூல்களில் விவரித்திருக்கிறோம். திருவாய்மொழியில் *சொன்னால் விரோதப்பதிகத்தில் "கொள்ளக் குறைவிலன்" என்ற விடத்திற்கு முன்னோர்கள் அருளியுள்ள சுவைமிக்க பொருளறியாமலோ மறந்தோ "கொள்ளக் கொள்ளக் குறையாதவன்" என்று பொருளெழுதி விட்டாரவர். அவ்விடத்திற்கு அது பொருளன்று. "பக்தர்கள் செய்யும் துதிமொழிகளை ஏற்றுக்கொள்வதற்குமிக்க தகுதியுள்ளவன் எம்பெருமான்" என்பது அவ்விடத்திற்கு அர்த்தம். ("கவிக்கு நிறைபொருளாய் நின்றான்" என்றார் திருமழிசைப்பிரான்.) இவ்விடத்துத்தவற்றையும் நாம் எழுதியிருக்கிறோம். ஆனால் அது இவர்கள் கண்ணில் படவில்லை போலும்! அதைப் பற்றி விசாரமில்லை. மேலே காட்டின இரண்டிடங்களில் அப்பெரியார் எழுதின பொருள் சுவைக்கேடானதே என்பதை இவர்கள் அநுவாதம் செய்யத்தகுமா? "ஆனைக்கும் அடி சறுக்கும்" என்னும் மகுடத்தில் நாம் எழுதியிருப்பது ஒக்கும். இவர்களுக்கு ஆற்றலிருந்தால் அதைக் கண்டிக்க வேண்டும். இங்ஙனே அஸந்தர்ப்பமாக இவர்கள் எழுதியுள்ளவற்றை ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷித்தருளவில்லையே என்று வருந்துகிறோம். கடாக்ஷித்தருளியிருப்பரேல் நான்முகத்தைப் பற்றின மகிழ்ச்சியுரை அருளியிருக்க ந்யாயமில்லையே.



## தேரழுந்தூர் செய்தியொன்று.

நான் இளமையில் தேரழுந்தூர் ஸேவிக்கச் சென்றிருந்தேன். அங்கு அப்போது ஏதோ உத்ஸவம் நடந்து கொண்டிருக்கிறது. அத்யாபகர்கள் நால்வர் பெரிய திருவந்தாதி ஸேவிக்கிறார்கள். ஸேவை செவிககினிதாகவுள்ளது. அபத்தபாடங்கள் அதிகம். பெரிய திருவந்தாதியில் ( ) மாண்பாவித்தந்நான்று என்கிற பாசுரத்தில் "மாயவன் நஞ்சு வன்பாவித்துண்டான்" என்கிறவிடத்தை அந்த அத்யாபகஸ்வாமிகள்

"மாயவனம், சூண்பாவித் துண்டானதோருருவம்" என்று ஸேவிக்கிறார்கள். எனக்கோ ஒன்றும் புரியவில்லை. ஸேவைமுடிந்த பிறகு அவர்களை நோக்கி அப் பாசுரத்தைச்சொல்லுமாறு வேண்டினேன். "மாண்பாவித்து அந்நான்று......மாய வணம், சூண்பாவித்துண்டானதோருருவம்" என்கிறார்கள். இது என்ன பாஷை? என்கிறேன். "என்ன பாஷையாக உமக்குத் தோன்றுகிறது?" என்றார்கள் மாய வணம்—சூண்பாவித்து என்ற சொற்கள் தமிழாகத்தோன்றவில்லையே! என்றேன். உடனே அவர்களிடமிருந்த ஒரு நாலாயிரப் படிப்பைக் கொணர்ந்து காட்ட அதில் "மாயவனைஞ், சூண்பாவித்து" என்று பதிப்பிக்கப் பட்டிருப்பதைப் பார்த்தேன். இப்படியேயா நீங்கள் சந்தை சொன்னீர்கள்? என்று கேட்டேன். எங்கட்குச் சந்தை சொல்லிக் கொடுக்க யாரும் கிடைக்கவில்லை; நாங்களே புத்தகத்தைப் பார்த்து உருச் சொன்னோமென்றார்கள். அவர்கள் மற்றொன்றும் சொன்னார்கள். பெரிய திரு மொழியில் "தந்தை காலில் பெருவிலங்கு' என்று தொடங்கும் பதிகத்தில் செம் பொன் மதிள் என்று தொடங்கும் மூன்றாம் பாசுரத்தில் "தென்னிலங்கைக்கு இறை வன் சிரங்கள் ஐயிரண்டும்" என்று பிரித்துப் பதிப்பியாமல் சிரங்களையிரண்டும் என்று பதிப்பித்திருப்பதனால் அர்த்தஜ்ஞானமில்லாத நாங்கள் தென்னிலங்கைக் கிறைவன் சிரங்களை இண்டும் என்றே பல நாள் ஸேவித்து வந்தோம். ஒரு பெரி யார் இங்கு எழுந்தருளின போது அதைக்கேட்டுச் சிரித்துத் திருத்திக் கொடுத் தார். பெரிய திருவந்தாதியில் நாங்கள் ஸேவித்ததில் தவறு இருந்தால் திருத்திக் கொடுக்க வேணுமென்றார்கள். மேல் விஷயம் நிற்க.

சில பாடங்களை எல்லாப் பதிப்புகளிலும் ஒரே விதமாக இருப்ப தாகக்காட்டி இவர்கள் தான்தோன்றியாகத் திருத்தினதாகவும் காட்டியுள்ளார் கள். வடமொழிவேதத்தில் "ஹிரண்யயேந ஸவிதா ரதேந என்கிற மந்திரத்தில் ஹிரண்யயேந என்பதை ஹிரண்மயேந என்று திருத்துவதோ பொருமவை. பெரிய திருமடலில் காயாவின் சின்ன நறும்பூந்திகழ் வண்ணன் என்ற விடத்து பூந்திகழ் என்றே எல்லாப் பதிப்புகளிலும் உள்ள தென்றும் தகுதி நோக்கி பூத் திகழ் என்று தாம் திருத்தி விட்டதாகவும் நான் முகத்தில் எழுதியுள்ளார்கள். பாதங்கள் மேலணி பூந்தொழ என்றவிடத்திலும் 'பூத்தொழ' என்றே திருத்திவிட் டார்கள் ஸ்ரீ மதாண்டவன் ஸ்வாமி இப்படித்தான் ஓதி வருகிறாரா? அல்லது இனி மேலாவது ஓதப்போகிறாரா என்பதை உலகம் தெரிந்துகொள்ள வேண்டும்.

## அமலனாதிபிரான் திருத்தம் பற்றி.

அமலனாதிபிரான் என்பதை அமலனாதிப்பிரான் என்று இவர்கள்தாம் வெகு சாமர்த்தியமாகத் திருத்திவிட்டதாய் ஆனந்தப் படுகிறார்கள். இங்ஙனமே திருவெழு கூற்றிருக்கையை திருவெழுக்கூற்றிருக்கை என்று திருத்தலாம். திருவாசிரியத்தைத் திருவாச்சரியம் என்று திருத்தலாம்; திருத்தலாம் என்று என்ன? திருத்திக்கொண்டு தானே வருகிறார்கள்! இங்கு உலகம் மருள் கொள்ளாதபடி சில தெரிவிக்கிறேன். உபதேசரத்தின மாலையில் திருப்பாணாழ்வாருக்கு இட்டருளின பாசுரத்தில் "அன் புடனேதான் அமலனாதிபிரான் கற்றதற்பின்" என்பது மூன்றாமடி. இங்கும் திருத்த வேண்டியதுதான் என்பர்கள். திருத்தமுடியாது. அன்புடனே, தானமல னாதிபிரான் என்று சீர்பிரிக்க வேண்டும். இவை கூவிளங்காய்ச்சீர்கள். இங்கு ஆதிப்பிரான் என்று

ஆக்கினால் (ஆ-திப்-பிரான்), தேமாங்கனிச் சீராகும். கனிச்சீர் வெண்பாவிற் பயிலாததாய், அதுபற்றி எங்களுக்கென்ன என்பாரிவர். திருக்குறளில் முதற்குறளில் ஆதிபகவன் என்பதை ஆதிப் பகவன் என்று திருத்தியாக வேண்டும். மேலே ஒரு சிறு கதை கேண்மின்.

## நின்று நின்று நினைகின்றேன் கதை

இளமையில் எனக்குத் திருத்தகப்பனார் திருவாய்மொழிச் சந்தை சாதிக்கும் போது 5-10-6 "நின்று நின்று நினைகின்றேன் உன்னை எங்ஙனம் நினைகிற்பன்" என்று ஸாதித்தார். அப்போது நான் ஒன்று கேட்டேன்— நின்று நின்று நினைகின்றேன் என்று ஸாதித்தான பிறகு உன்னை எங்ஙனம் நினைகிற்பன் என்று ஸாதிப்பது பொருந்துமோ? 'நின்று நின்று நைகின்றேன்' என்று சாதித்திருக்கலாமென்றேன். உடனே திருத்தகப்பனாருக்கு ப்ரளயமான சீற்றமுண்டாயிற்று. "நீ அதிக ப்ரஸங்கி. மூன்று நாள் என்னிடம் சந்தைக்கு வாராதே' என்று தண்டனை விதித்தார். அந்த இடத்தில் இப்பதிப்பில் எவ்விதமாகப் பாடமிருக்கிறது பார்ப்போமென்று ஆங்கு யோசிக்கச் சொன்னேன். கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாயிருந்தது. "நினைகின்றேனை" விட்டு "நினைக்கின்றேன்" என்றிருப்பதாக வாசித்துக் காட்டினார்கள். இவர்களுடைய இலக்கண ஞானம் மிக வியக்கத் தக்கது. "இலக்கியங்கண்டதற் கிலக்கணம் இயம்பல்" என்னும் சூத்திரம் இவர்களது காதிலும் விழவில்லை போலும்! திருவாய்மொழியிலேயே திருக்கோளூர்ப் பதிகத்தில் "நினைக்கிலேன் தெய்வங்காள்" என்பது ஒரு பாசுரம். மேலே திருக்காட்கரைப் பதிகத்தில் "நினைகிலேன் நானுனக் காட்செய்யும் நீர்மையே" என்பதொரு பாசுரம். ஓரிடத்தில் "நினைக்கிலேன்" மற்றோரிடத்தில் 'நினைகிலேன்.' *குரவையாய்ச்சியர் பதிகத்தில் 'நினைக்கும் நெஞ்சுடையேன்' என்றவர் தாமே *கருமாணிக்கமலைப் பதிகத்தில் "நினையும் நீர்மையதன்று" என்கிறார். ஓரிடத்தில் 'நினைக்கும்' மற்றோரிடத்தில் "நினையும்" நம்மாழ் *வார் திருவாய்மொழியில் "மழக்களிற்றினம் சேர் மாலிருஞ் சோலை" என்றார். திருமங்கையாழ்வார் (4 9-2) "அந்தணனெம்மாலே சோலை மழகளிறே" என்கிறார். நம்மாழ்வாரது மழக்களிறு. திருமங்கையாழ்வாரது மழகளிறு. நம்மாழ்வார் திருவாசிரியத்தில் (3) "குறிப்பில் கொண்டு நெறிப்பட" என்கிறார். இவர்தாமே திருவாய்மொழியில் (2-10-6) "நெறிபட அதுவே நினைவது நலமே" என்கிறார். ஓரிடத்தில் நெறிபட; மற்றோரிடத்தில் நெறிப்பட; திருவாய்மொழியில் 'தனிமாத் தெய்வத் தளிரடிக்கீழ்' என்றுள்ளது. திருவாசிரியத்தில் (3) 'தனிமாத் தெய்வத்தடியவர்க்கு' என்று வருகிறது. அதிலேயே ஏழாம் பாட்டில் 'ஒரு மாதெய்வம்' என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. ஓரிடத்தில் மாத்தெய்வம்; மற்றோரிடத்தில் மாதெய்வம். "செங்கனி வாய் செங்கமலம்" என்பது போன்ற பல விடங்களில் 'செங்கமலம்' என வருகிறது. 'செக்கமலத்தலர் போலும்' என்பது திருவாய்மொழிப் பாசுரம். இப்படி நூற்றுக்கணக்கில் எடுத்துக்காட்ட வல்லோம். 'சிறு' என்னும் சொல்லின் பக்கத்தில் வல்லெழுத்து வந்தால் புணர்ச்சியில் வலி மிகுமா மிகாதா என்கிற விசாரத்தை யெடுத்துக்கொண்டு (ஏறக்குறைய அறுபது வருடங்களுக்கு முன்பு) நாம் எழுதியிருந்தவற்றை இவர்கள் கண்டிருந்தால் மிக்க தெளிவு பெற்றிருப்பார்கள். இங்கே சில காட்டுகிறோம் காண்மின்:* கண்ணிநுண் சிறுத்தாம்பினால்—*யாமடு சிறு

சோறும் கண்டு— *என் சிறுத்தேவி போய் *சிறுசுளகு மணலும் கொண்டு *என் சிறுக்குட்டன், *தன்சிறுக்கைகளால்— *சிறுபுலியூர்ச் சலசயனம் *செய்தநின் சிறுச் சேவகம் *உன்தன்னைச் சிறுபேர் அழைத்தனவும் *சிறுகாலத்தையுறுமோ. இங்ஙனே வலி மிகுந்தும் மிகாமலுமுள்ள பற்பல விடங்களை எடுத்துக்காட்டியுள்ளோம். இவற்றில் எதைக்கொண்டு எதைத் திருத்த நினைக்கிறார்களோ இவர்கள் பார்ப்போம்.

### உழைக்கின்றேற்கு—சிந்தித்தேற்கு

திருமாலையில் "உழைக்கின்றேற்கென்னை நோக்காதொழிவதே" என்றும் பெரிய திருமொழியில் திருச்சேறைப் பதிகத்தில் "திருவடியைச் சிந்தித்தேற் கென் ஐயறிவும்" என்றும் ஓதி வருகிறோம். இங்ஙனே பலபல ப்ரயோகங்கள் உள்ளன. 'உழைக்கின்றேற்கு என்னை' என்பது பொருந்துமோ? 'உழைக்கின்ற என்னை' என்றன்றோ இருக்க வேண்டும்"? [திருவடியைச் சிந்தித்தேற்கு என்] என்பதுதான் பொருந்துமோ? "திருவடியைச் சிந்தித்த வென்" என்றன்றோ இருக்கவேண்டும்? இவையெல்லாம் இவர்களது கண்ணில் படவில்லை போலும். படாதது க்ஷேமமே.

### வயிச்சிரவணன்—வதரியாச்சிரமம்

பெரியாழ்வார் திருமொழியில் மாணிக்கங்கட்டிப் பதிகத்தில் (5) "வழுவில் கொடையான் வயிச்சிராவணன்" என்றவிடத்து ராவணனுக்கு ப்ரஸக்தியில்லாமையாலே "ரவணன்" என்று திருத்தப்பட்டது. பெரியதிருமொழியில் பதரிகாச்ரமப் பதிகத்தில் "வதரியாச்சிராமம்" 'வதரியாச்சிரம'மாகத் திருத்தப்பட்டது. இந்தத் திருத்தங்கள் அவச்யந்தான். ஆனால் ஒரே ஒரு ஸந்தேஹம். இப்பதிப்புக்கு மங்களா சாஸனமளித்தருளின ஸ்ரீமத் ஆண்டவன்ஸ்வாமி ஒருவராவது—இது கண்டு தெளிந்தாவது— இனியாவது— இத்தகைய பாடங்களை அநுஸந்தானத்தில் கொள்வரா என்று. "ஆகா! கொள்ளத் தடையென்!" என்று அவரது ஸ்ரீமுகம் வெளிவந்துவிட்டால் மிக மகிழ்வோம்.

### "இரக்க மொன்று மின்றியே"

திருச்சந்த விருத்தத்தில் (32) (இரக்க மண் கொடுத்தவர்க்கு) "இரக்க மொன்று மொன்றியே" என்கிற பாடத்தைச்சில பதிப்பாளர் "இருக்க ஒன்றுமின்றியே" என்று பதிப்பித்துள்ளார்கள். வ்யாக்யானத்தில் "ஒரு பதந்யாஸமும் சேஷியாதபடி" என்றிருப்பதால் இதுவே வ்யாக்யானத்துக் கிணங்கிய பாடமென்றும் வெளியிட்டுள்ளார்கள். அது இவர்கள் கண்ணில் படவில்லை போலும். பெரியாழ்வார் திருமொழியில் வண்ணமாடப்பதிகம் முதற்பாசுரத்திலும் மூன்றும் பாசுரத்திலும் "பிறந்தினில்" என்றிருப்பது "தமிழுருக்கும் பாடமன்று" என்று மு.ரா. எழுதி வெளியிட்டுள்ளார். அதை இத்தமிழர் எப்படி உகந்தாரோ!

### என்னீர்மை கண்டிரங்கிப் பாசுரம்

திருவாய்மொழியில் அஞ்சிறைய மடநாராய் பதிகத்தில் (1.4.4) "என்னீர்மை கண்டிரங்கி" என்று இருப்பதை ஒரு தமிழன் பார்த்தான். இது தலைவி பிரிவில் பசுகிற பாசுரமாகையாலே அவளது நீர்மையைத் தலைமகன் (பிரிவில்) கேட்க முடியுமே யொழியக் காண முடியாதே என்றெண்ணி 'கண்டிரங்கி' என்பதைக் 'கேட்டிரங்கி' என்று திருத்திவிட்டான். ஆனாலும் பெரியாரைக் கேட்டுத்தெளிவோம் என்கிற

நன்மதி கொண்டு பட்டரிடம் வந்து 'கேட்புழி' என்றுரைத்த் கண்டிரங்கி' என்றிருப்பது எங்ஙனே பொருந்தும் என்றானாம். அது கேட்ட பட்டர் குறுந்தொகையிலிருந்து (399-ஆம் செய்யுள்) 'ஊருண்கேணி உண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்ற செய்யுளையும், "புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில் அள்ளிக் கொள்ளற்றே பசப்பு" என்கிற குறளையும் எடுத்துப் பரக்க உபந்யஸித்து அவனைத் தெளிவித்தாராம். இவர்கள் தங்களுக்குத் தோன்றும் ஐயங்களை ஸ்ரீமத் ஆண்டவன் போல்வாரான பெரியார்களிடம் விஜ்ஞாபித்துத் தெளிவு பெறப்பாக்கிய மற்றவர்களாயினரே என்று மிகமிக வருந்துகிறோம். இங்ஙனமே புள்ளம்பூதங்குடிப்பதிகத்தில் "புள்ளுப் பிள்ளைக்கிரை தேடும்" என்றவிடத்து ஆலவாயுடையான் என்கிறவொரு தமிழன் ஐயமுற்றுப் பட்டரிடமே கேள்வி கேட்டுத் தெளிந்தானும். அங்குப் "பள்ளச்செறுவில் கயலுகள" என்று மிழ சொல்லி விட்டு [இரைதேட ப்ரஸக்தியில்லாதவிடத்திலே] 'இரைதேடும்' என்றது பொருந்துமோ என்பது ஆலவாயுடையானுடைய சங்கை. இங்குப் பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யான ஸ்ரீஸூக்திகள் இன்சுவை மிக்கவையாதலால் இவர்கள் இந்த வ்யாஜத்திலாவது அவ்விடம் எடுத்து ஸேவித்து இன்புறுக. பெரிய திருமொழியில் (1-4-6) "காரணந் தன்னால் கடும்புனல் கயத்த' என்ற விடத்தில் 'கயத்த' என்றிருப்பது மிகத் தவறென்றும் 'தகைத்த' என்பது உருமாறிவிட்டதென்றும் மு.ரா எழுதியுள்ளதை இவர்கள் பார்த்திலர் போலும்! திவ்ய ப்ரபந்தங்களில், 'ஊர்போலும்' என்று சில விடங்களிலும் 'ஊர் போல்' என்று சில விடங்களிலும் ஓதப்பட்டு வருகிறது. "ஊர் போல்" என்னுமிடங்களில் 'போல்' என்னக் கூடாது. 'போலும்' என்ன வேணும்" என்று மு.ரா. எழுதியிருப்பதும் இவர்களால் கொள்ளப்படவில்லையே! இது காறும் வெளிவந்துள்ள எல்லாப் பதிப்புகளையும் எல்லாருடைய ஆராய்ச்சிகளையும் ஒருங்கே நோக்கி இவர்கள் பதிப்பித்திருந்தால் அதுவொரு அபூர்வ நாலாயிரமாக இருக்குமே! உலகுக்கு அதுவொரு அதிபெரிய விருந்தாகவுமிருக்குமே!!

### கிரீட சூடா ரத்ந ராஜீ:

திருவாய்மொழியில் (3-1-1) "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?" என்ற ஓரடியைமட்டும் பட்டர் (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்) ஒரு ச்லோகமாக்கியருளினர். அதாவது "கிரீட சூடாரத்நராஜீ ராதி ராஜ்ய ஜயச்ரிகா, முகேந்து காந்தி ருந்முகம் தரங்கிதேவ ரங்கிண:" என்பது. நாலுபாதம் கொண்ட விதனில் முதல் பாதத்தின் முடிவு யாப்பிலக்கணத்தோடும் முரண்பட்டுள்ளது. "ராஜீ:" என்கிற பதத்தின் முதலெழுத்து முதற்பாதத்தின் முடிவிலும் 'ஜீ' என்னுமெழுத்து இரண்டாம் பாதத்தின் முதலிலும் வந்துள்ளது. இது சாஸ்த்ரவிருத்தம் என்று ஆக்ஷேபித்து நம்மிடம் விடைபெற்றுர் பலர். தேசிகன் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் "இதி கதயாம் ஸ்ரீ சடாரிர் பபூவ" என்று ப்ரயோகித்தார். அப்போதே ஒருவர் ஸ்வாமியிடம் நேரில் வந்து "க்ருஞ்சாநு ப்ரயுஜ்யதே லிடி" என்ற பாணினியின் அநுசாஸனமிருக்க இப்படி ப்ரயோகிக்கலாமோ என்று கேட்டவளவிலே "ந வயம் லக்ஷணஜ்ஞாநாதிநா:, லக்ஷ்யைக சக்ஷுஷ்கா: ஸ்ம:" என்று ஸாதித்து தம் பாதயாம் ப்ரதமமாஸ பபாத பச்சாத்" என்கிற காளிதாஸ ப்ரயோகத்தை

எடுத்துக் காட்டினாராம். ஸ்வாமி தாமே ஸ்ரீஸ்துதியில் "பவதீ பாதலாக்ஷா ரஸாங்கம்" என்று ஸாதித்திருப்பதைக் கண்ட வொருவர் பவதீபாத என்று ஸமாஸமாகுமோ? என்று ஸ்வாமியிடமே கேட்க அதற்கும் அங்ஙனமே விடைகூறி ஸ்ரீகுணரத்ன கோசத்திலுள்ள "பவதீ ஸம்பந்தத்ருஷ்ட்யா ஹரிம் பச்யேம" என்கிற பட்டர் ப்ரயோகத்தைக் காட்டிப் போய்வாரும் என்றருளினராம். இத்தகைய இதிஹாஸங்கள் ஆயிரக் கணக்கில் வெளிவருமிதனில்.

தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய

பெரிய திருமொழியில் எட்டாம் பத்தில் ஐந்தாவது பதிகம் "தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல் பின்" என்று தொடங்குவது. இதில் "தந்தை காலில்" என்பது தவறென்றும் "தந்தை கால்" என்றே இருக்கவேண்டும் என்றும் ஒரு பண்டிதர் திருத்தி வெளியிட்டிருப்பதாகக்காட்டி இவர்கள் தாமும் அதையே ஆதரிப்பதாகவும் காட்டியுள்ளார்கள். அந்தப் பண்டிதருடைய பதிப்பு 50,60 வருஷங்கட்கு முற்பட்டது. அவரும் மு. ராகவையங்காரைப் போன்றவர். (அதாவது ஸம்ப்ரதாயநெறியிற் படியாதவரென்கை) அவர் தென்கலை ஸம்ப்ரதாயஸ்த்தர். தமிழ்ப் பண்டிதர். நம்மிடத்திலும் நேசமுள்ளவர். ஆனாலும் தவறுகள் கண்டால் மறுத்தொழிப்பது நமது பணியாதலால் அப்போதே அவருடைய திருத்தங்களை மறுத்து வெளியிட்டிருக்கிறோம். பெரியாழ்வார் திருமொழியில் நெறிந்த கருங்குழற்பதிகத்தில் திக்குநிறை புகழாளன் பாசுரத்தின் ஈற்றடி "வைத்துக் கொண்டுகந்தனளால்] என்பது. இங்கு எதுகை நயம் குன்றியதாகக் கண்ட அப்பண்டிதர் "வைத்துக் கொண்டு" என்பதில் வைத் என்பதை மூன்றாமடியிற் சேர்த்து "துக்கொண்டுகந்தனளால்" என்பதை நான்காமடியாக அச்சிட்டுள்ளார். அதைப்பற்றிப் பிறகு அவர் தாமே அநுதபித்தார். அதிலேயே * ஆசைவாய்ச் சென்றசிந்தையர் பதிகத்தில் "சொல்லு சொல்லென்று சுற்றமிருந்து" என்பதை "சுற்றுமிருந்தார்" என்று இருக்க வேண்டு மென்று திருத்திவிட்டார். பெரியதிருமொழியில் திருக்கண்ணமங்கைப் பதிகத்தில் "கண்ண! நின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம" என்றவிடத்து "நீ கற்கலாம்" என்று திருத்தியுள்ளார். இத்தகைய திருத்தங்கள் ஒன்றிரண்டல்ல; பல நூற்றுக் கணக்கானவை. இவையெல்லாம் என்னுடைய இருபத்தைந்தாவது பிராயத்திலேயே களைந்தொழிக்கப்பட்டன. அவற்றை அவரும் கண்ணுற்று "ஸம்ப்ரதாய வழியறியாத நான் ஏதோ தமிழிலக்கணஞானத்தைக் கொண்டு திருத்தினதற்கு ஸ்வாமி இவ்வளவு எழுத வேண்டுமா?" என்று இவ்வளவே எழுதி நின்றார். அக்காலத்தில் கீர்த்தி மூர்த்தியான திருக்கண்ணபுரம் பட்டப்பா சுவாமிகள் (அவரோடு நெருங்கின உறவுள்ளவர்) அப்பண்டிதரை மிகமிகக் கடிந்தார். ப்ரக்ருதம் "தந்தை கால் விலங்கற" என்று இவர்கள் ஆதரித்துள்ள திருத்தம் அப்பண்டிதருடைய திருத்தமென்று காட்டப்பட்டிருக்கின்றது. அவருடைய திருத்தங்கள் எல்லாவற்றையும் இவர்கள் ஆதரித்திருக்கலாமே! தந்தை காலில் விலங்கற பாசுரத்தில் சிலர் (காலில்) என்பதை அறவே எடுத்திட்டு "தந்தை விலங்கற வந்த தோன்றல் பின் தமியேன் தன்" என்று திருத்தினர். அங்கேயே தமியேன் தன் என்றவிடத்து, தன் வேண்டியதில்லை என்று அதைத்தள்ளியும் பதிப்பித்தார்கள். ஸ்ரீமதாண்டவன் க்ருஹஸ்தராயிருக்கையில் இருவரும் நெருங்கிப் பழகின போது இத்தகைய திருத்தங்களைப்பற்றிப் பலகால் பேசியிருக்கிறேன். ஸ்வாமி புன்முறுவலோடு திருச்செவி சாற்றியிருக்கிறார். இவையெல்லாம் திருவுள்ளத்தில் மறந்திராது இப்போது தான்

எழுதுகிற விவற்றை ஸ்வாமி கடாக்ஷித்தருளும்போது இன்னின்ன விஷயம் இன்னின்ன இடத்தில் நான் பேசினேன்" என்பதைத் தவறாது நினைத்தருள்வர். ஸ்வாமி நூல் முகத்தையும் கடாக்ஷித்தருளவில்லை. இப்பதிப்பிலுள்ள பாடமாறுதல்களையும் கடாக்ஷித்தருளவில்லை. ஏதோ தாக்ஷிண்யத்தினால் மங்களாசாஸனபத்ரிகை தந்தருளினவர் என்று சபதம் செய்கிறேன்.

திருவாய்மொழியில் வளவேழுலகு பாசுரத்தில் ஈற்றடியில் "எந்தாயென்பன் நினைந்து நைந்தே" என்று பிள்ளான் முதலாக ஸகலாசார்யர்களும் ஆதரித்து உரைத்த பாடத்தை மறந்த வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் எதுகையின்பத்தை நோக்கி "இனைந்து நைந்தே" என்று திருத்தி உரையிட்டுள்ளார். *நினைந்து நைந்துள் கரைந்துருகி* என்ற மேற்பாசுரத்தையும் "இனைந்து நைந்துள்" என்றே வைத்து உரையிட்டார். இங்ஙனே மற்றும் சில பாடமாறுதல்கள் அவருடைய உரைகளிற் காண்பவை. அவற்றைக் கடாக்ஷித்தருளின மணவாள மாமுனிகள் உபதேசரத்ன மாலையில் அவர்க்காக இட்டருளின பாசுரத்தில் "தம் பெரிய போதமுடன்" என்று அற்புதமாக ஸாதித்துள்ளார். ஆசார்ய கடாக்ஷாதீநமான ஞானமன்றிக்கே ஸ்வதந்த்ர ஞானம் கொண்டவர் என்பதைக்காட்டவே "தம்பெரிய போதமுடன்" என்றருளினர். ஆனாலும் அவற்றில் இலக்கணப்பிழை சொல்ல வொண்ணாதென்கிற திருவுள்ளத்தாலே "ஏதமில் பன்னீராயிரம்" என்றும் ஸாதித்துவைத்தார். மாமுனிகள் தவிர வேறொருவரால் இங்ஙனே ஸாதித்தருள முடியாது. கண்டனமும் மண்டனமும் பிறர் அறியாதபடி ஸாதித்த வகையன்றோ இது! அந்தச் சீயர் கொண்ட பாடங்களை யாவது இவர்கள் வெளியிட்டிருந்தால் (குறிப்புரையிலாவது வெளியிட்டிருந்தால்) உலகுக்கு அது ஒரு நன்மையாகும். ஸம்ப்ரதாய கந்தமே அறியாத இக்காலத்தவர்களின் பதிப்புக்களை ஆதாரமாகக் காட்டி இவர்கள் பலபல பாடங்களை மாறுபடுத்தியிருப்பது வைணவ வுலகுக்கு மிக்க வருத்தத்தை விளைக்கும். மீண்டுமெழுதுகிறேன். இந்தப் பாட மாறுதல்களை ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிகள் கடாக்ஷித்தருளினரேல் திருவுள்ளம் மிகமிகப் புண்படுவர் என்பதில் ஐயமில்லை.

"மயிலை மாதவதாஸர் பதிப்பு பற்றி"

மயிலை மாதவதாஸர் பதிப்பு நூல் முகத்தில் பலகால் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது. அப்பதிப்பைப் பற்றி 1963ம் வருடத்தில் நான் வெளியிட்ட "ஆழ்வார்களின் அவதார கால நிர்ணயம்" என்னும் நூலில் (ஸ்ரீ ராமாநுஜன் 171ல்) எழுதி வெளியிட்டிருப்பவற்றைக் காட்டுகிறேன் காண்மின்.

"திவ்யப் பிரபந்தப் பதிப்புகள் பல பல இருந்தாலும் மயிலை மாதவ தாஸன் பதிப்பு என்று தற்காலம் மிகப் பிரசித்தி பெற்றுள்ள பதிப்பைப் பற்றியே இங்கு ஆராய்ச்சி வெளியிடப்படுகின்றது. மயிலை மாதவ தாஸன் என்பவர் சில வாண்டுகட்கு முன்பு பூதவுடல் நீத்துப் புகழுடம்பு பெற்றவர். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திலும் அதைச் சார்ந்த நூல்களிலும் இப்பெரியார் மெய்யன்பு வாய்ந்தவரென்பது நமது நம்பிக்கை. வைணவப் புலவர்களின் காலக்ஷேப கோஷ்டிகளிலும் உபந்யாஸ கோஷ்டிகளிலும் அநுபவிக்கப் பெற்றதனால் இவர்க்கு இவ்வன்பு தோன்றியதென்று பலர் பகரக் கேட்டிருக்கை. இவர் நம்முடைய சென்னையுபந்யாஸ

கோஷ்டிகளில் நெடுங்காலம் அந்வயித்திருந்தும் இவரை நாம் வெகு நாள் வரை அறியாமலேயிருந்தோம்.

இப்பெரியார் முதன் முதலாக நாலாயிர திவ்யப் பிரபந்தத்தை நல்ல முறையில் பதிப்பித்தனர். பிறகு திருப்பாவையின் வியாக்கியானங்களான மூவாயிரப்படி ஆறுயிரப்படி முதலானவற்றையும் பதிப்பித்தனர். இக்காரியங்களை இவர் ஸ்ரீவைஷ்ணவப் பெரியார்களின் உதவிகொண்டே செய்ததாகக் கேள்வி. இவருடைய நாலாயிர திவ்யப் பிரபந்தப் பதிப்பு 1943-ஆம் வருஷத்தில் முதன்முதலாக நிகழ்ந்திருக்கின்றது. பிறகு இரண்டாம் பதிப்பு 1950ல் வெளிவந்தது. மூன்றாம் பதிப்பு மிகவும் ஸமீபகாலத்தில் வெளிவந்துள்ளது. அதாவது 1962 டிஸம்பரில் அச்சிடப் பெற்று (20—3—1963)ல் சென்னை கேசவப் பெருமாள் தேவஸ்தானத்தில் பல பெரியார்கள் மூலமாகக் குலாவப் பெற்று வெளிவந்துள்ளது. 'உயர்திரு. மணலி லக்ஷ்மண முதலியார் ஸ்பெசிபிக் எண்டோமெண்ட்ஸ்' மூலம் வெளியிடப்பட்டது.

திவ்யப்ரபந்தம் மற்ற நூல்களைப் போலல்லாமல் தமிழ் வேதமாகக் குலாவப் படுதலால் புதிய பாடங்களை மனம்போனபடி புகுத்தாமல் பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களுக் கிணங்கிய பழைய பாடம் ஆதரிக்கப் பட்டிருக்கின்றதா வென்று ஆராய்வதே என்போல்வாருடைய பணியாகும். மேலே குறித்த மயிலை மாதவ தாஸன் முதற் பதிப்பில் 743,744ஆம் பக்கங்களில் துணை நூல் அட்டவணை வெளியிடப்பட்டதில் 'ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் வெளியிட்டுள்ள திவ்யார்த்த தீபிகை"... ..."ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் வெளியிட்ட பகவத்கதை யமுதம்" ....."ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் பதிப்பு ஸ்ரீவசநபூஷண ஸாரம், நித்யாநுஸந்தானம்"—ஆக இப்புத்தகங்களைத் துணைகொண்டதாக' அறிவிக்கப்பட்டுள்ளது. ஆனால், நம்முடைய திவ்யார்த்த தீபிகையில் பூருவாசாரிய வியாக்கியான விருத்தங்களென்று மறுக்கப்பட்ட சில பாடங்களும் அப்பதிப்பில் கொள்ளப்பட்டிருந்ததைக் கண்டயாம் 'இன்னின்ன பாடங்கள் திருத்தப்பட வேண்டும்' என்று அவர்க்குத் தெரிவித்திருந்தோம். அப்போது அப்பெரியார் ஆராய்ந்து பார்த்து 'ஸ்வாமிகள் தெரிவித்த திருத்தங்கள் மிகவும் அவசியமானவையே; காரியஸ்தர்களின் கவனக் குறைவினால் ஏற்பட்ட தவறு மன்னிக்கத்தக்கதே; மறு பதிப்பில் கவனிக்கச் செய்யலாகும்' என்று விடை தந்திருந்தார். இப்போதைய பதிப்பில அப்பிழைகளெல்லாம் அறாமலிருப்பதோடு புதிய பிழைகளும் புகுந்துள்ளன"—இத்யாதிகள் அப்போது நாம் எழுதி வெளியிட்டவை. அது நிற்க.

இமவந்தம் தொடங்கி இருங்கடலளவுமுள்ள அந்தணர்களனைவராலும் வைஷ்ணவர், ஸ்மார்த்தர், மாத்வர் திராவிடர், தெலுங்கர் என்கிற வாசியின்றிக்கே ஓதப்பட்டு வருகின்ற வடமொழி வேதத்தில் ஸம்ஹிதையில் எழுத்திலோ ஸ்வரத்திலோ மாத்திரையிலோ சிறிதும் பாடபேதமென்பது கிடையாது. நமது யஜூர் வேதத்தில் மூன்றாவது காண்டம் இரண்டாவது ப்ரச்நத்தில் ஒரிடத்தில் மட்டும் "ப்ரத்யவரோஹந்தி" என்னுமொருபதத்தில் பாடபேதம் வந்துள்ளது. ப்ரத்யவரோஹந்தி என்றும் ப்ரத்யவரோஹ்ந்தி என்றும். இவ்விரு

வகைப் பாடக்காரர்களும் பாராயணங்களில் ஒன்றுசேரும்போது இவ்விடம் வரும்போது தங்கள் தங்கள் பாடத்தை அழுத்தி ஓதுவர்கள். வேதபாஷ்யத்தில் 'ப்ரத்யாரூடவாந் பவதி'' என்று ஏகவசனமாக உரை செய்திருக்கையாலே ஏகவசன பாடமே உரியதென்பர் ஒரு சாரார். ''பாஷ்யங்கொண்டு பாடத்தைத் திருத்துவாரில்லை; வ்யாகரணாதிகளைக்கொண்டும் திருத்துவாரில்லை. அநாதியாக எங்குமுள்ள பாடம் பஹுவசநமாகத்தான்'' என்பர் மற்றொருசாரார். இங்ஙனமே தமிழ் வேதத்திலும் நியமத்துடன் ஸதாசார்ய ஸகாசத்திலே சந்தை சொல்லித்தரித்து வரும் பெரியார்கள்—''இலக்கியங்கண்டதற்கிலக்கணமியம்பலின்'' என்னும் நன்னூற் சூத்திரத்தின் உட்கருத்தையறியாமல் எதையும் எப்படித் திருத்தி அச்சுக்குக் கொடுத்தாலும் எழுத்துக்கோப்பவர்கள் கோக்க மாட்டேன் என்றார்கள்; மைபடிய மாட்டேனென்றது, தாள் [Printing Paper] கொள்ள மாட்டேனென்றது. புத்தகம் வெளியேறமாட்டேன் என்றது என்கிற துணிவினால் ஒரு வரம்புக்கும் கட்டுப்படாமல் அருகுலவிழுகர்களாய் 'மனமேராஜா, மதியே மந்திரி' என்னும் கதையாய் கேட்பாரில்லை என்று இவர்கள் செய்யும் திருத்தங்களை நெஞ்சாலும் நினையார்கள். இதனை ஸ்ரீமதாண்டவன் (திருவரங்கத்தாச்ரமத்திலிருக்கும்போது) ஒரு ப்ரஸங்கத்தில் பரக்கப் பேசினேன்; திருவுள்ள முவந்தருளினர். இப்பதிப்பில் காணும் ஏனைத்திருத்தங்களில் ஒன்றையும் திருவுள்ளமுவந்து ஏற்கமாட்டாரென்று சபதம் செய்கிறேன். முடிவாக ஒன்றே சொல்லுகிறேன். இவர்கள் எனக்கு விடைதரவேண்டா; தற்போது ஹைதராபாத் நகரத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமதாண்டவன் ஸந்நிதிக்கு விரைந்து சென்று ''இத்திருத்தங்களையெல்லாம் நான் மனமார ஆமோதிக்கிறேன். இங்ஙனேதான் நானும் பாடமோதி வருகிறேன். இதுவரை அநுஸந்தியா விடினும் இனி அநுஸந்திப்பேன்'' என்று ஒரு ஸ்ரீமுகம் எழுதுவித்து வாங்கி வெளியிட்டுவிடுதல் நன்று.

### பிரசுரிகர்களுக்கு ஓர் அறிக்கை

இப்போது நாம் பரிசீலனை செய்கிற திவ்ய ப்ரபந்தப் பதிப்பில் பலபல திருத்தங்கள் உள்ளன. சில திருத்தங்களை நூன்முகத்தில் ப்ரஸ்தாபிக்கப் பட்டுள்ளன. மேலே பாசுரங்களை வரியடைவே பார்த்துக்கொண்டு போனால், மிகவருந்தத்தக்க திருத்தங்கள் ஏராளமாக வுள்ளனவென்று தெரிகிறது. இங்கு நாம் காட்டியதிருத்த மறுப்புகள் பூர்த்தியாகக்காட்டப்பட்டுவிட்டன என்று யாரும் நினைக்கவேண்டா! புத்தகத்தை நேராகப் பார்க்கக்கூடிய நேத்ரபாடவம் தற்போது எனக்கு இல்லாமையால் பிறர்வாசித்துக்காட்டக்கேட்டது கொண்டே இஃது எழுதலாயிற்று. வாசித்துக்காட்டுபவர்கள் எதையும்தவறுகவாசிப்பவர் அல்லர், உள்ளபடியேதான் வாசித்துக் காட்டுகிறார்கள். இப்பதிப்புச் செய்தவர், திவ்யப்ரபந்தங்களைக் குருமுகமாக அதிகரித்துக்காலக்ஷேபமும் செய்த மஹான்களை அடிபணிந்து நன்மைதீமைகளைத் தெரிந்து கொள்ளாமல் ஸ்வதந்திரமாக மனம்போனபடியெல்லாம் திருத்திவிட்டார்களே என்றுவருந்தாமலிருக்கமுடியவில்லை. இவர்கள் வேறுயாரையும் அடிபணிய வேண்டா. ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகள் இரண்டுவருஷகாலம் சென்னையிலேயே

எழுந்தருளியிருந்தார்கள். இந்த திவ்யப்ரபந்தப்பதிப்பும் சென்னையிலுள்ள அச்சுக்கூடத்தில்தான் நடந்திருக்கிறது. இதை ஆண்டவன் ஸ்வாமிகள் திருக்கண் செலுத்திக் கடாக்ஷித்தருளும்படி செய்திருந்தால் உலகுக்கு எவ்வளவு உபகாரமாயி இருக்கும்! திவ்ய ப்ரபந்தங்களில் அந்த ஸ்வாமிக்கு நிகரான Expert என்று சொல்லக் கூடிய) நிபுணர் (ஆங்கிலத்தில் தற்காலம் வேறொருவர் இல்லையே! "ஸ்ரீமத்ஆண்டவன் கடாக்ஷித்தருளப் பெற்றபதிப்பு" என்று ஒருவரியிருந்தால் இந் தப்பரிசிலனைதோன்றுவதற்கு அவகாசமே இராதே! இதில் கண்ட திருத்தங்களுக்கு நான் வருந்துவதற்கு மேலாகவன்றோ ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமி வருந்துவர்கள்! அதில் என்ன ஸந்தேஹம்? மற்ற திருத்தங்கள் கிடக்கட்டும். அமல னாதிபிரானை அமல னாதிப்பிரான் என்று திருத்தியது வெகு ஸாஹஸம் அல்லவா? திருவழுக்கூற்றிருக்கை என்று பதிப்பித்த புத்தகங்களும் காணப்படுகின்றனவே. அதையும் தழுவியிருக்க லாமே! திருவாசிரியத்தில் ஆறுவது பாசுரமான *ஓ! ஓ! உலகினதியல்வே* "என்கிற பாசுரம் ஆச்சர்யமயமாகயிருப்பதனால் இந்தப்ரபந்தம் திருவாச்சர்யம் என்று பெயர் கொண்டதே யன்றி திருவாசிரியம் என்று பெயர் கொண்டதன்று என்று துணிந்து சிலர் எழுதியிருப்பதை இவர்கள் கண்டிலரா? ஆதி + பிரான் என்னும் பதங்கள் புணருமிடத்து ஆதிப்பிரான் என்று தானாகும் என்று நியதியில்லை. 'ஆதிபிரான்' என்கிற இயல்பான பாடத்தில் ஒருவகைக் குற்றமுமில்லை. ஒன்று கேண்மின். நம்மாழ்வார்" "அண்ணலார் கமலபாதம்" என்றருளினர். திருப்பாணாழ்வார் "திருக்கமல பாதம்" என்றருளினர். திருவரங்கத்தமுதனார் (பா. 2) "கமலப் பதங்கள்" என்றருளினர். பகரவொற்று இல்லாத பாடம் சரியா? பகரவொற்றோடு கூடிய பாடம் சரியா? பெரியாழ்வார் சீதக்கடல் பதிகத்தில் (1-2-1) "பாதக் கமலங்கள் காணீரே" என்றார். அமலனாதிப்பிரானுக்குத் தனியன் அருளிச் செய்த பேராசிரியர் "காட்டவே கண்ட பாத கமலம்" என்றார் பெரியாழ்வார் ப்ரயோகத்தைக் கொண்டு இதைத் திருத்தி யிருக்கவேண்டாமோ இவர்கள்? நன்னூலில் "மவ்வீறொற்றொழிந்து உயிரீறொப்பவும், வன்மைக்கினமாத் திரிதலுமாகும்" என்னும் சூத்திரத்தை ஓரடையில் நாம் விபரீத்துப் பல தத்துவங்களை விவரித்துள்ளோம். அதெல்லாம் இவர்களது கண்ணில் படவேயில்லை.

### திருவாய்மொழியில் இரண்டாம் வேறு.

திருவாய்மொழி ஏழாம் பத்தில் "என் திருமார்பன்" என்கிற பாட்டில் "என் திருமார்பன் தன்னை" என்பதை "என் திருமார்பன் றன்னை" என்று இவர்கள் பதிப்பித்துள்ளார்கள். இதில் தவறு ஒன்றுமில்லை. மார்பன் றன்னையென்று பதிப்பித்தது போல (ஆரம்பத்தில்) என்திரு என்பதை என்றிரு என்று பதிப்பித் திருக்கலாம். "என்திரு" என்று பிரித்தே பதிப்பித்துள்ளார்கள். இதிலும் தவறு இல்லை. இப்பாசுரத்தின் நான்கு அடிகளிலும் னகர றகர வெதுகையே உள்ளது. என்றிரு, என்றுமென், நின்ற, வென்று என்றிருப்பது காண்க. கங்குலும் பகலும் பதிகத்தில் *என்திருமகள் சேர்மார்பனே பாசுரத்திலும் இங்ஙனே தான். இனி திருவாய்மொழியிலேயே ஆரம்பத்தில் பொன்னுலகாளீர் பதிகத்தில் (10) *அந்திருந் தும் முடைய பாசுரத்தில், அந்திரு, அந்தரம்,........, மந்திரத்து என்று நகர தகர வெதுகையுள்ளது. இதில் மூன்றாமடியில் மட்டும் என்றிரு என வருகிறது. இவர்கள் என்திரு என்று பதிப்பித்திருந்தாலும் இலக்கணப்படி என்றிரு என்றே சொல்வடி

வம் என்பதில் ஐயமில்லை. இவர்கள் ஆராய்ச்சி செய்து (எந்திரு) என்று பதிப்பித்திருக்கவேண்டும். எதனுலென்னில் இவர்கள்கொண்ட த[illegible]மொழியினுல் மேலெடுத்த பாசுரத்தில் ஓரடியில் மட்டும் எதுகை நயம் மாறுபட்டிருக்கிறதென்பதை இவர்கள் இசைந்தாக வேண்டும். இத்தகைய இடங்களை உற்றுநோக்கினாலே எதுகையின்பத்தைப் பெரிதாகக் கொண்டு ஆங்காங்கு இவர்கள் செய்திருக்கிற திருத்தங்கள் ஸ்ரீமதாண்டவன்ஸ்வாமி உட்படப் பல பெரியார்கள் ஹாஹாகாரம் செய்யத்தக்கவை. இப்படி எவ்வளவு எழுதலாம் தெரியுமோ? திருவிருத்தத்தில் "வம்பார் வினைச்சொல்லவோ எம்மை வைத்ததிவ்வான் புலத்தே" என்றும் திருவாய்மொழியில் "ஏபாவம் பரமே!" என்றும் ஆழ்வாரருளிச் செய்தது இந்நூல் எழுதும் போது அடிக்கடி நினைவுக்கு வருகின்றது.

இந்தப் பரிசீலனைக் கட்டுரை நாம் எழுதத் தொடங்கும் போது ஒரு நாலைந்து பக்கம் எழுதிமுடிப்போம் என்றே எண்ணியிருந்தோம். ஒன்றின் மேலொன்ருகப் பல விஷயங்கள் நினைவுக்கு வந்து கொண்டேயிருப்பதால் 'இதை யெழுதி விடுவோம், இதை யெழுதி விடுவோம்' என்று தோன்றிக் கட்டுரை வளர்ந்து வருகிறது. நாலாயிரம் பாசுரங்களில் எண்ணாயிரம் கேள்விகள் கேட்கவேண்டுமிவர்களை. பெரியாழ்வார் "சுருப்பார்குழலியசோதை" என்ருர். அவருடைய திருமகளார் "சுரும்பார் குழற்கோதை" என்கிருர். இவ்விரண்டில் இலக்கணத்திற்குச் சேர்ந்தது எது? "பூக்கொள் மேனி நான்கு தோள்" என்கிருர் நம்மாழ்வார். "பூங்கொள் திருமுகத்து" என்கிருள் ஆண்டாள். இவ்விரண்டில் இலக்கணத்திற்குச் சேர்ந்தது எது? இரண்டில் ஒன்றைத் திருத்த வேண்டுமா, வேண்டாமா? திருமாலை ஈற்றுப் பாசுரத்தில் (வளவெழுந்தவளமாட) 1,3,4 அடிகளில் ளகர எதுகை உள்ளது. இரண்டாமடியில் "கவளமால் யானை" என்றுள்ளதில் அவ்வெதுகை போய்விட்டது. சிலர் "களடமால்யானை" என்று பாடம் காட்டியிருக்கிருர்களே. அதை இவர்கள் ஆதரித்திருந்தால் எதுகையின்பம் ஒழுங்காய்விடுமே! நாச்சியார் திருமொழியில், கண்ணனென்னும் கருந்தெய்வம் பாசுரத்தில் முதலடியின் ஈற்றுச்சீர் (கிடப்பேனை)—காய்ச்சீர். இரண்டாமடியின் ஈற்றுச்சீர் (பேசாதே) இதுவும் காய்ச்சீர். ஈற்றடியின் ஈற்றுச்சீர் (வீசீரே) இதுவும் காய்ச்சீர். மூன்ருமடியின் ஈற்றுச்சீர் (பீதக) கூவிளச்சீர். ஓசையும் மிகமிகக் குன்றியுள்ளது. 'பீதகமாம்' என்று இவர்கள் திருத்தியிருந்தால் அது ஓசையின்பத்திற்கும் சீரொழுங்கிற்கும் ஒத்திருக்குமே!



நம்மாழ்வார் "வாயுந்திரையுகளும்" என்கிருரோரிடத்தில் "வாய்க்குந் தண் பொருநல்" என்கிருர் மற்ருேரிடத்தில். 'வாய்க்கும்' என்பதற்கும் 'வாயும்' என்பதற்கும் பொருளில் வாசியுண்டா? இந்த [illegible] பகுதிவிகுதிகள் எப்படி? திருச்சந்தவிருத்தத்தில் "எத்திறல் இடர்க்கடல் கிடத்தி" என்கிருர். 'எத்திறல்' என்றொரு பதமுண்டோ? ஆண்டாள் "கார்க்கொள் படாக்கள்" என்கிருர். திருமங்கை மன்னன் "கார் கொள் வேங்கைகள்" என்கிருர். ஒன்றைக்கொண்டு மற்ருென்றைத் திருத்த வேண்டுமா? வேண்டாவா? திருப்பாவையில் நாயகனுய் பாசுரத்தில் 'நேசநிலைக் கதவம்' என்று எங்கும் வழங்கும் பாடத்தை '[illegible]நிலைக்கதவம்' என்று திருத்தியுள்ளார்கள். யகர எதுகையில் சகரம் சேர்வதையும் சகரவெதுகையில் யக

ரம் சேர்வதையும் எங்கும் காண்கிறோம். திருவாய்மொழியில் கேசவன் தமர் பாசுரத்தில் "நாயகன்" ஈற்றடி. கேயத்தீங்குழல் பாசுரத்தில் "வாசப் பூங்குழல்" இரண்டாமடி. *நாயகன் முழுவேலகுக்கும் பாசுரத்தில் மூன்றாமடியில் 'கேசவன்' புகுகிறான். ஆழிமழைக்கண்ணாவில் ஈற்றடி 'மார்கழி' ஏழடிகளில் மகரவெதுகை. ஈற்றடியில் என்ன எதுகையோ? கீழ்வானம் பாசுரத்தில் "கூவுவான்" என்பது எதுகைக்குச் சேராதென்று சிலர் திருத்தியுள்ளார்கள். 'கூவான்' என்றால் எதுகைக்கும் சேரும். பொருளிலும் குறையில்லை. 'கூவுகின்றான்' என்றார் பெரியாழ்வார். "கோழியும் கூகின்றதில்லை" என்கிறார் திருமங்கையாழ்வார் நாயகனாய் பாசுரத்தில் 'தூயோமாய்' என்பதைத் 'தூயமாய்' என்று சிலர் திருத்தியுள்ளனர். தூயோம், தூயம் இரண்டும் பொருளில் வாசியற்றதே.

## முக்கியமான வார்த்தை கேளீர்.

இவர்களுடைய ஸம்ப்ரதாயத்திற் கென்று சிலர் திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்கள் இயற்றியுள்ளார்கள். அச்சிட்டுமுள்ளார்கள். திருவாய்மொழியில் *நன்றாய் ஞானங் கடந்து போய் பாசுரத்தில் "நல்லிந்திரியம்" என்று பாடம் வைத்து 'இந்திரியத்தை' ஈந்திரியமாக்கி அதற்கு இலக்கணமும் காட்டியுள்ளார்கள். அப்பாடத்தை இவர்கள் விட்டிருக்கவே கூடாது. திருப்பாவையில் "எறுமை சிறுவீடு" என்பதை "சிறை வீடு" என்று பாடமாக்கி உரை செய்துள்ளார்கள். உங்கள் புழைக்கடை பாசுரத்தில் "வெண்பல் தவத்தவர்" என்பதை 'வம்பற்ற அத்தவர்' என்று பாடமாக்கி உரை செய்துள்ளார்கள். இப்பாடங்களைத் தழுவாதது ஸ்வாசார்யாபசாரமல்லவா? ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் உத்தர க்ருத்யாதிகாரத்தில் "வில்லி புதுவை நகர் நம்பி விட்டு சித்தர் தங்கள் தேவரை" என்ற பாடத்தை தேசிகன்தாமே ஆதரித்தருளியுள்ளார். சேட்லூரார் பதிப்பிலும் நவனீதர் பதிப்பிலும் இங்ஙனமேயுள்ளதைக் காணலாம். நகர் நம்பி என்கிற இரண்டு சொற்களுக்கு வியாக்கியானமும் செய்யப் பட்டுள்ளது. இப்படி தேசிகனே ஆதரித்த பாடத்தை இவர்கள் தள்ளியிருப்பது ந்யாயமா? நகர் நம்பி என்கிற இரண்டு சொற்களை அறவே தள்ளி விட்டார்களே. இப்பரிசிலனைக்கு இஃதொன்றே சிகரமாகும். பன்னியுரைக்குங்காற் பாரதமாம் என்று தற்போது இவ்வளவோடு நிற்கிறோம்.

## ஒரு சிறு குறிப்பு

ஒருசிறு குறிப்பு: இப்போது என்னுடைய நூலாக வெளிவருமவை யெல்லாம் எனது கையால் எழுதப்படாமல் நான் சொல்லக் கேட்டுப் பிறரால் எழுதப்பட்டு வருதலாலும் புரூப்(Proof) திருத்தங்கள் செவ்வனே யிருக்கின்றனவா என்பதை நான் கவனிக்கமுடியாமலிருப்பதனாலும் சிலபல பிழைகள் புகுந்திருக்கலாமிதில். அவை அச்சுப்பிழையும், (சிறுபான்மை) எழுதுபவர்களின் கைப்பிழையுமாகவே இருக்குமாதலால் அத்தகைய பிழைகளைப் பிறர் எடுத்துக்காட்ட முயலலாகாது. இவர்கள் இப்பதிப்பை ஸ்ரீமதாண்டவன்ஸ்வாமிகள் கடாக்ஷித்தருளச் செய்திராவிடினும், திருவிண்ணகரில் (ஒப்பிலியப்பன் ஸந்நிதியில்) விவேகிவித்வத்ஸார்வபௌமராக விளங்கும் ஸ்ரீமதுபயவே நவனீதம், ஸ்ரீராமதேசிகாசார்யரையாவது கடாக்ஷிக்கச் செய்திருக்கலாம். இனி எழுதிப்பயனென்?

# ஸ்ரீமத் அக்நிஹோத்ர தாதாசாரியரோடு ஸம்பாஷணை.

[இந்நூலில் இராச்சிந்தனைகள்மட்டுமேயன்றி இடையிடையே நடைமுறை நிகழ்ச்சிகளும் எழுதப்பட்டுவருதலால் இங்கு இஃது எழுதப்படுகின்றது.]

(25—11—73) இன்று இங்குத் தேவப்பெருமாள் ஸன்னிதியில் விசேஷோத்ஸவம். [அதாவது தாதாசார்ய குடும்பஸ்தர்களின் மூலபுருஷராகிய ஸ்ரீதாத தேசிகன் திருவவதார நன்னாளின்று.—கார்த்திகையில் அநுஷம்] இதை உத்தேசித்து பேரருளாளனுக்கும் பெருந்தேவித்தாயாருக்கும் விசேஷோத்ஸவம் நடத்தப்பட்டு வருகிறது. இன்று காலை 9 மணிக்கு புறப்பாட்டின் இயல்கோஷ்டிக்காக ஸந்நிதிக்குச்சென்று அங்குள்ள ஒரு மண்டபத்தில் உட்கார்ந்திருந்தேன். புறப்பாட்டிற்குக் கால்மணி அவகாசமிருந்தது. அந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீமான் திருக்குடந்தை அக்னிஹோத்ரம் ராமானுஜதாதாசாரியர் [இவ்வுத்ஸவம் ஸேவிக்கவந்தவர்] என்னைத் தேடிவந்து அருகில் உட்கார்ந்து யோகக்ஷேமம் விசாரித்தார். நான் சுருக்கமாக பதில் சொல்லி விட்டு "உலகமெல்லாம் வருந்தும்படியான ஒரு புத்தகத்தை வெளியிட்டிருப்பது நியாயமா? இது என்ன காரியம்? தேவரீருக்கு இது தகுமா?" என்று கேட்டேன். அதற்கு அவர் "இந்த ப்ரஸ்தாபம் வேண்டாம் என்று பிரார்த்திக்கிறேன். ஏதோ தேவரீரை ஸேவித்து லோகாபிராமமான வார்த்தைகளைக்கேட்கவேணுமென்று வந்திருக்கிறேன். அதைப்பற்றின பேச்சே வேண்டாம்" என்றார். ஆனாலும் நான் விடவில்லை. "அதைப்பற்றி நான் ஸ்ரீராமானுஜனில் தொடர்ச்சியாக மூன்று இதழ்களில் 'போலிவைணவர் பொய்யுரை மறுப்பு' என்னும் மகுடத்தின் கீழ் எழுதியிருப்பவைகளை வாசித்துப் பார்த்ததுண்டா?" என்றேன். அதற்கு அவர் "அந்த ப்ரஸ்தாபம் வேண்டவே வேண்டாம் என்றேன். அடியேனுக்கு வைதிகப் பழக்கம் லௌகிகப் பழக்கம் இரண்டும் உள்ளது. ஏதோ லௌகிக முறையில் எழுதினதை அறவே மறந்துவிடவேணும்" என்றார். அப்போது நான் "வயஸ: கர்மணோர்த்தஸ்ய ச்ருதஸ்ய அபிஜநஸ்ய ச, வேஷவாக்வ்ருத்திஸாரூப்யம் ஆசரந் விசரேதிஹ" என்கிற ச்லோகம் தேசிகன் உதாஹரிக்கிறார். இது தேசிகனுடையதா அல்லது ப்ராசீன ப்ரமாணமா" என்றேன். "தேசிகனுடையதன்று; ப்ராசீன ப்ரமாணம்தான்" என்றார். அதற்குமேல் நான் சொன்னது—"இந்த ச்லோகத்தின் பொருள் தேவரீருக்குத் தெரிந்ததுதானே! இதன்படி தேவரீர் நடந்துகொள்ள வேண்டாமா?' என்றேன். அவர் மறுபடியும் "ஏதோ லௌகிக ரீதியில்" என்றே சொல்ல ஆரம்பித்தார். அதற்குள் புறப்பாடு ஆரம்பமாகி திருச்சின்ன ஒலியும் வாத்ய கோஷமும் செவிப்பட்டது. உடனே இருவர்க்கும் பிரிவு ஏற்பட்டது. இவ்வளவோடு எங்கள் காலை ஸம்பாஷணை முற்றிற்று. இப்படி அவரோடு பேசினதிலிருந்து என் மனதில் பட்டதாவது—'வரலாற்றில் பிறந்த வைணவம்' என்கிற சுவடி இவரெழுதினதாக இராது; இவர் கையொப்பம் கொடுத்திருக்கலாமத்தனை—என்று. "தேவரீருக்கு பதில் எழுதுவதை முடித்துக்கொண்டதாக நேற்று ஸ்ரீராமானுஜனில் வெளியிட்டிருக்கிறேன். கடாக்ஷிக்கவேணும் என்று சொல்லி கோஷ்டிக்குப் போய்விட்டேன். அவரும் சிரித்துக்கொண்டே போய்விட்டார். இது காலைச் செய்தி. பரமானந்த ஸந்தோஹ மயமான மாலைச் செய்தியைக் கேண்மின்.

## அன்றிரவு நடந்த விசேஷங்கள்

அன்றிரவு 8 மணிக்குமேல் பெருமாள் திருவீதிப் புறப்பாடு நடந்து 9 மணிக்கு முடிந்தது. பிறகு ஒரு மணி காலம் ஸன்னிதியிலேயே இருந்தேன். 12 மணிக்குத் தான் திருவாராதனோபக்ரமம் என்று தெரிந்தபடியால் க்ருஹத்துக்குப் போவோம் என்று புறப்பட்டு உள்ளிருந்து கோபுர வாசல் வந்து சேர்ந்தேன். என்னுடைய கார் ரிப்பேரில் இருந்தபடியால் ஒரு வண்டி பார்த்து வரச் சொல்லி ஒருவரைத் தெருக் கோடிக்கனுப்பினேன். அந்த ஸந்தர்ப்பத்தில் அக்னி ஹோத்ரம் தாதாசார் அங்கு வந்து சேர்ந்தார். என் கையைப் பிடித்துக் கொண்டு "என்ன இங்கே நிற்கிறது! திருமாளிகைக்கு எழுந்தருளவேணுமா? கூட ஒருவரும் துணையில்லையே! அடியேன் துணைவனாயிருந்து கையைப் பிடித்துக் கொண்டே திருமாளிகையில் கொண்டு சேர்க்கிறேன். எழுந்தருளவேணும்" என்றார். "என்றால் அவ்வளவு தூரம் நடந்து செல்ல முடியாது. இதோ வண்டி வந்துவிடும்; போய்விடுகிறேன். தேவரீருக்கு ச்ரமம் வேண்டாம்" என்றேன். உடனே அவர் சென்று விட்டார். ஐந்தாவது நிமிஷத்தில் (சென்னை அட்வகேட்) ஸ்ரீமத்புபயவே. D. ராமஸ்வாமி ஐயங்கார் தமது காருடன் என்னருகே வந்து சேர்ந்து "இதோ கார் கொண்டு வந்திருக்கிறேன். எழுந்தருளவேணும்" என்றார். இது பேரருளாளனுடைய பேரருள் என்று சொல்லிக் கொண்டே அவருடைய காரில் ஏறிக் கொண்டேன். அவரும் காரில் என் பக்கத்தில் வீற்றிருந்தார். "திடீரென்று தேவரீர் கார் கொண்டு வரக் காரணம் என்ன?" என்றேன். "அக்னி ஹோத்ரம் ஸ்வாமி ஓடி வந்து, அண்ணங்கராசாரிய ஸ்வாமி கோபுர வாசலில் நிற்கிறார். திருமாளிகைக்குப் போக வண்டியில்லாமல் ச்ரமப்படுகிறார். தேவரீர் காரில் அழைத்துக் கொண்டுபோய் விடவேணும் என்று சொன்னார். அது கேட்டே வந்தேன்" என்றார் D. R. ஸ்வாமி. மேற் செய்திகளை அடுத்தபடி தெரிவிக்கிறேன். அக்னிஹோத்ரம் தாதாசார் இளமை தொடங்கியே எனக்கு மிகவும் ஸ்நிக்தர். இடையில் வேதலக்ஷண விவாதங்கள் நேர்ந்து வாதப் போர் வலுத்திருந்தாலும் ப்ரேமம் குன்றாமலே யிருந்தது. ஸமீப காலத்தில் அவரைப் பற்றி நான் எழுதியுள்ளவை ஸ்ரீ ராமாநுஜனைப் படித்தவர்களுக்கு மட்டு மன்றிக்கே உலகத்துக் கெல்லாம் தெரிந்திருக்கும். அவருக்கும் தெரிந்திருக்கும். அப்படியிருந்தும் சித்தவிகாரம் சிறிதும் கொள்ளாமல் அவர் என்னிடம் காட்டிய மரியாதை மிக மிக வியக்கத்தக்கது. இன்று காலை கோயிலில் முதன் முதலாக அவர் என்னைச் சந்திக்க வந்தபோது மூன்று படிகளுள்ள ஒரு நாற்கால் மண்டபத்தில் உட்கார்ந்திருந்தேன். அவர் கீழ்ப்படியில் உட்கார்ந்தார். அது கண்ட நான் "இப்படி உட்காரக் கூடாது. என் பக்கத்திலேயே உட்காரவேணும்" என்று நிர்ப்பந்தித்து இழுத்தேன். "அது முடியவே முடியாது. ஸமமாக உட்கார எனக்கு யோக்யதை இல்லை" என்றார். அதற்கு நான் சொன்னேன்— "ஏகாந்த ஸ்தலமாயிருந்தால் எப்படியும் இருக்கலாம். பலபேர் பார்த்துக் கொண்டிருக்கிறார்களிப்போது. இந்த ஸந்தர்ப்பத்தில் தேவரீர் இப்படியிருக்க நான் ஸஹிக்கமாட்டேன். என் பக்கத்திலேயே உட்கார வேணுமென்று மிக நிர்ப்பந்தித்தேன். அதற்கவர் சிறிதும் இசையாமலே கால் மணி கீழ்ப்படியில்

இருந்து கொண்டே பேசினார். அந்த சீலத்திற்கு மிக வியந்தேன். அது ஏக தேசம் என்னும்படியாக (மேலே நான் விவரித்தபடி)]இரவில் அவர் காட்டிய பரிவு பற்றி என்னவென்று எழுதுவேன்! "இப்பொழுதெம்மனோரால் இயம்புதற் கெளிதோ" என்ற கம்பர் செய்யுளே நினைவுக்கு வருகிறது.; இது இவ்வளவோடு நிற்க.

## ஸ்ரீமத் D. R. ஸ்வாமியோடு ஸம்பாஷணை

ஸ்ரீமத் D. R. ஸ்வாமிக்கு இப்போது பிராயம் எழுபத்தைந்து. எனக்கு 83. என்னுடைய இருபதாவது பிராயத்தில் இவரோடு பழக்கம் தொடங்கியது. இவர் தமது திருத்தகப்பனாரோடுகூட தேவப்பெருமாள் உத்ஸவத்திற்கு அடிக்கடி வந்து கொண்டிருந்தார். (இற்றைக்கும் அடிக்கடி வந்துகொண்டிருக்கிறார்.) பரிசயம் தொடங்கின காலத்தில் இவ்விடம் இவர் வருகிறபோதெல்லாம் நெருங்கிப் பழகிப் பலபல பேச நேரும். அவற்றை யெல்லாம் இவரும் மறந்திரார். நானும் மறந்திலேன். என்னுடைய அறுபதாண்டு பூர்த்திவரையில் ஸ்நேஹ பாவம் அதிகரித்தே வந்தது. அந்த ஸமயத்தில் இவர் என்னைப்பற்றி எழுதியிருந்த ஓர் அபிநந்தன பத்திரிகை உலகமெல்லாம் பரவியுள்ளது. அது இவரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டது. ஆங்கிலக் கட்டுரையும் மொழி பெயர்ப்பும் பலகால் வெளிவந்திருக்கிறது. இப்போது தமிழ் மொழி பெயர்ப்போடு ஆங்கிலமும் இங்குக் கீழே தரப்படுகின்றது. (இது என்னுடைய பெருமையைக் காட்டிக் கொள்வதற்கன்று. அப்போது அவருக்கு ஹ்ருதய பூர்வகமாக என்பால் இருந்த ப்ரீதிவிச்வாஸங்களை உலகுக்கு நினைவூட்டுவதற்காகவேயாம்) அக்கட்டுரை வருமாறு :—

# EMBODIMENT OF VAISHNAVISM

(SRI. D. RAMASWAMI IYENGAR, ADVOCATE, MADRAS.)

It has been said that a true Vaishnavite lives for one or more of three objects. The first of them is to teach to others the principles, precepts, and practices of Sri Vaishnavism and to propagate on proper lines Srivaishnava philosophy and religion. The next is to write and publish treatises embodying for the benefit of generations to come the great principles and lofty ideals of that Siddanta and Sampradaya. And the third is to revel in the enjoyment of the Archa forms of the Lord in Temples dedicated to His worship and consecrated by the mystic outpourings of the Alwars. If there is one person, who has attained and achieved in a very large measure all the aforesaid three objects of a true Vaishnavite's life, that person is Sri Prathivadi Bhayankaram Annangarachariar Swami of Kancheepuram, whose Sastiabdapurti is being celebrated by all Vaishnavites this month. His reputation as a profound scholar in the scriptures, Sanskrit and Tamil, and as a brilliant lecturer on religious topics is so wide that it is unnecessary to dwell upon it here. The services he has

rendered to the cause of Vaishnavism throughout Bharata Varsha and in a marked measure in Madras State, not to speak of Madras City as a separate unit, are unparalelled in recent years. He has carried the banner of Vaishnavism to distant Badari in the north and to Cape Comorin in the south. Wherever he goes, he becomes a centre of a wide range of activities in regard to religion. In his own place, Kancheepuram, he has established a Patasala and a Publishing House. The Vidyarthis turned out of the former and the books issued from the latter bear eloquent testimony not only to his zeal in the cause of religion but to his capacity for organisation and sustained endeavour. It is difficult to name another person to day who spends more of his time each day for religious propaganda. Endowed with indefatigable energy, the Swami works for almost 16 or more hours per day and all in the cause of the Vaishnavite religion. Among the great gifts that God has endowed the Swami with, particular mention has to be made about his voice which with its volume and cadence has enabled him to keep spell-bound large audiences for hours on end. In matter and manner the Swami's lectures have set a standard in recent times. His mastery of Telugu has enabled him to convey the message of Ubhaya Vedanta to Telugu-speaking persons also. In regard to the publications—he must have some hundreds to his credit—there is none to beat him either for the quickness with which he writes and publishes, or for the knowledge that he brings to bear on any topic dealt with by him. The topics themselves are so varied and diverse, at least they were very varied and diverse in the earlier days. Controversy had always a fascination and grip over the mind of the Swami and for that reason a lot of not very pleasant literature has come into being both by and in respect of the Swami. As can be expected, the Swami's powerful personality has been the target for hostile and adverse criticism from several quarters. It must be said to his credit that he never felt vanquished in any verbal warfare and would always have the last word on any subject,—there have been several such,—in a very telling manner. All that apart, the service that he has rendered and is rendering to the cause of Vaishnavism is immeasurable. The thanks and gratitude of several thousands of Vaishnavites all over the country are being paid to him in ever increasing measure. The prayer of those thousands of Vaishnavites will go up on this special occasion of the celebration of the Swami's Sastiabdapurthi, that God may be pleased in His bounty to preserve the Swami for several more decades, full of energy and enthusiasm even as on the present day, to serve well and truly the case of true Vaishnavism.

D. RAMASWAMY.

(இந்த ஆங்கில வ்யாஸத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு வருமாறு.)

# ஸ்ரீ வைஷ்ணவமே வடிவெடுத்தவர்

ஓர் உண்மை ஸ்ரீ வைஷ்ணவன் மூன்றுவித நோக்கங்களுடன் உயிர் வாழ்கிறான். ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தையும் கொள்கைகளையும் பிறருக்குப் போதிப்பதும் தேசமெங்கும் பிரசாரம் செய்வதும் முதலாவதாகும். பின்புள்ளார் கற்றறிந்து ஆசரிக்கைக்காக அச்சித்தாந்தத்தின் உயர்ந்த கொள்கைகளையும் உன்னத நோக்கங்களையும் க்ரந்த ரூபமாக எழுதி வெளியிட்டு ப்ரசுரம் செய்வது இரண்டாவதாகும். கடைசியாக, ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்டு ஆங்காங்கு அர்ச்சாரூபியாய்த் திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களின் வடிவழகில் ஈடுபட்டுப் பணி செய்தல். இம்மூன்றுவகை வைஷ்ணவ நோக்கங்களுக்காக முறையே பாடுபட்டுப் பெரிதாக வெற்றியடைந்தவர் உளரேல் அவர் ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமி ஒருவரே யாவர். இவருடைய ஷஷ்டியப்தபூர்த்தி இம்மாதம் எல்லா வைஷ்ணவர்களாலும் தேசமெங்கும் கொண்டாடப் படுகிறது. ஸம்ஸ்க்ருதம் தமிழ் ஆகிய உபய வேதாந்தத்திலும் இந்த ஸ்வாமிக்கிருக்கும் அபார ஞானம், ஆச்சரியமான உபன்யாஸ சக்தி இவைகளைப்பற்றிய கீர்த்தி தேசமெங்கும் பரவியிருப்பதால் நான் அதிகமாகச் சொல்லத்தேவையில்லை. பாரதகண்டத்தில்—முக்கியமாகச் சென்னை மாகாணத்தில்—அதனிலும் முக்கியமாக மதராஸில்—ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர்செய்திருக்கும் பணிகள் சமீப காலங்களில் இணையற்றதாகும். ஸ்ரீவைஷ்ணவக்கொடியை இவர் ஹிமாலயம் முதல் கன்னியாகுமரி வரையில் வெற்றிகரமாக நாட்டியிருக்கிறார். இவர் எங்குச் சென்றாலும் அங்கு மத சம்பந்தமான நடவடிக்கைகளால் சூழப்பட்டு ஓர் பிரகாசமான நக்ஷத்திரம்போல் விளங்குகிறார். இவருடைய சொந்த நகரமான காஞ்சீபுரியில் ஓர் பாடசாலையையும் க்ரந்த ப்ரசுராலயத்தையும் ஸ்தாபித்திருக்கிறார். இவருடைய பாடசாலையிலிருந்து வெளியேறும் வித்யார்த்திகளும் ப்ரசுராலயத்திலிருந்து வெளியாகும் க்ரந்தங்களுமே மத விஷயத்தில் இவர்க்கிருக்கும் ஆர்வத்துக்கும், நிர்மாணத் திறமைக்கும், விடாமுயற்சிக்கும் சிறந்த அத்தாட்சிகள். இன்றைக்கும் ஒரு நாளைக்குப் பதினாறு மணிகளுக்குமேல், சிறிதும் குன்றாத வீர்யத்துடன், ஸ்ரீவைஷ்ணவத்துக்கே பாடுபடும் நபர் ஸ்வாமியைத் தவிர வேறு கிடையாது. கம்பீரமான வெண்கலகண்டத்வனியுடன் மணிக்கணக்காகக் கேட்போர் மனங்களை வசீகரித்து அப்படியே ஸ்தம்பிக்கச்செய்யும்சக்தியே எம்பெருமான் (இவருக்களித்திருக்கும் குணாதிசயங்களில் முதன்மையாகும். சொல்லப்படும் விஷயங்களிலும் எடுத்துரைக்கும் ரீதிகளிலும் இவரையே மற்றவர் தற்காலத்தில் பின்பற்றுகின்றனர். தெலுங்கு பாஷையில் இவருக்கிருக்கும் புலமை தெலுங்கு நாடுகளிலும் உபய வேதாந்தத்தின் உண்மைகளை இவரால் பரவச்செய்துவிட்டது. அந்தந்த காலத்தில் க்ரந்தங்களை எழுதி ப்ரசுரிப்பதிலேயோ (இவை இப்போது நூற்றுக்கணக்காகவேயிருக்கவேண்டும்) எந்த விஷயத்தை எடுத்துக்கொண்டாலும் அந்த விஷயத்தில் இவர்காட்டும் ஞானத்திலேயோ இவரை வெல்பவர் கிடையாது. இவர் கையாண்ட விஷயங்களோ அனேகம்; இவை பல துறைகளிலுள்ளவை என்பதையும் இங்கு ஞாபகப்படுத்துகிறேன்.

வாதப்போர் நடத்துவதில் ஸ்வாமிக்கு வொரு உற்சாகம். இதனால் ஸ்வாமியாலும் ஸ்வாமி விஷயமாகவும் அனேக ரஸமில்லாத க்ரந்தங்கள் உற்பத்தியாகியிருக்கின்றனவென்றாலும் இவற்றுக்கெல்லாம் காரணம் ஸ்வாமியின் அதி சக்திவாய்ந்த குணாதிசயமென்றே சொல்ல வேண்டும். இவ்வளவு சக்திவாய்ந்த ஒரு மஹாபுருஷர் விஷயத்தில் அசூயையையும் பொறாமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம். ஆனால், எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின்வாங்கவேமாட்டார். இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும். இந்த ரீதியில் அனேகம் உள்ளன. விஷயங்களைத் தேங்காய் உடைப்பது போல், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று உடைத்துக் காட்டுவர்! இவை ஒரு பக்கம் கிடக்கட்டும். ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர் செய்திருக்கும்—செய்துகொண்டிருக்கும் பணி கணக்கிட முடியாதது. இப்பணிகளின் பொருட்டு ஸ்வாமி திறத்து நன்றி பாராட்டும் பல்லாயிரக்கணக்கான ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி நடக்கும் இத்தருவாயில், ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டாக குன்றாத ஆரோக்யத்துடன் ஸ்ரீ வைஷ்ணவத்திற்குத் தொண்டாற்ற வேண்டுமென்று எம்பெருமானை ப்ரார்த்திக்கின்றனர்.

D. ராமஸ்வாமி அய்யங்கார்.

இக்கட்டுரையை D. R. ஸ்வாமி எழுதியது என்னுடைய வேண்டுகோளினால் அன்று. அப்போது என்னுடைய ஷஷ்ட்யப்தபூர்த்திக் கமிட்டிக்குத் தலைவராக விருந்த உயர் திரு. ஜஸ்டிஸ் கிருஷ்ணசாமி நாயுடு அவர்களின் வேண்டுகோளினால் என்று பிறகு தெரிந்தது. இக்கட்டுரையைப் படிப்பவர்களுக்கு இவர்க்கு என்பால் இருந்த அன்பும் ஆர்வமும் அளவுகடந்ததென்பது அறியவெளிதாம். சின்னாளில் அதற்குக் கண்ணெச்சில்பட்டுவிட்டது. அதை நான் இங்கு விவரிக்க விரும்பவில்லை. 'ஸர்வதா ஸுகரம் மைத்ரம் துஷ்கரம் பரிபாலனம்' என்றும் "ப்ரீதிர்ஹி அல்பேபி பித்யதே" (உண்டான அன்பு மிகச்சிறிய காரணத்தினாலும் மாறிவிடும் என்றபடி.) என்றும் பிரசித்தமன்றோ? திருவிருத்தத்தில் 'சேமம் செங்கோனருளே செறுவாரும் நட்பாகுவரென்று ஏமம் பெறவையம் சொல்லும் மெய்யே" என்ற பாசுரத்தில் செறுவாரும் நட்பாகுவர் என்றது மற்றைப் படிக்கும் உபலக்ஷணமன்றோ? நண்பரும் செறுவாராவர் அன்றோ? முன்னாட்களில் நான் அக்னிஹோத்ரம் தாதாசார்யரைப்பற்றி (எதிரம்பு கோத்து) எழுதியவை அதிகமா D. R. ஸ்வாமியைப் பற்றி எழுதியவை அதிகமா என்று பார்த்தால் அது அல்பம், இது அநல்பம். அது மடுவாகவும் இது கடலாகவும் இருக்கும். ஆனாலும் இருவருடைய உள்ளத்திலும் தூய்மை சிறிதும் குன்றவில்லை.

21-2-1964 என்கிற தேதியின் விசேஷம் உலகுக்கெல்லாம் ஞாபகமிருக்கும்: (சிறிது நினைவூட்டுகிறேன்) திருவல்லிக்கேணி தேவஸ்தான தர்மகர்த்தாக்கள் ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதியில் தொடர்ச்சியாக ஒன்பது நாள் உபந்யாஸம் (பல்வேறு விஷயங்களைப்பற்றி) நடத்தவேணுமென்று கேட்டுக் கொண்டிருந்தார்கள்; 13-2-64 தேதியிலிருந்து நடந்து வருகிறது. ஸ்ரீமதுபயவே. C. S. பார்த்தஸாரதி ஐயங்கார் (B.A., B.L.) ஸ்வாமி மேற்படி தேவஸ்தான தர்மகர்த்தாவாக எழுந்தருளியிருந்த ஸமயமென்று ஞாபகம். அப்போது நான் தினந்தோறும் டவுனிலிருந்து திருவல்லிக்கேணி சென்று இரவு 7 மணிமுதல் 9 மணி வரையில் உபந்யாஸம் நடத்திவருவது. எட்டு நாள் க்ரமமாக முடிந்துவிட்டது. ஒன்பதாநாள் இரவில் தேவப்பெருமாள் காஞ்சீபுரத்திலிருந்து தென்னேரித் தெப்ப உத்ஸவத்திற்குப் புறப்பட்டருளுகிற நாள். இரவு 10 மணிக்கு இங்கே புறப்பாடு அதற்கு நான் இங்கே (காஞ்சிக்கு) வந்து சேரவேணுமென்ற ஆசையினால் திருவல்லிக்கேணியில் எட்டாநாள் உபந்யாஸ முடிவில் ஸபிகர்களுக்கு இதைத் தெரிவித்து நாளைய தினம் மாலை 5 மணியிலிருந்து 7 மணி வரை உபந்யாஸம் என்று தெரிவித்து டவுனுக்கு வந்துவிட்டேன். மறுநாள் (21-2-64) என்னுடைய ஜாகையில் இருக்கும்போது பகல் 3 மணிக்கு திடீரென்று என்னுடம்பு முழுவதும் வேர்வையுற்று குடம் குடமாக நீர் வடிந்து ஹ்ருதய சைதில்யம் ஏற்பட்டது. அப்போது என்னோடு கூட என்னுடைய பெரிய ஜாமாதா ஸ்ரீ. உ. வே. அக்காரக்கனி ஸ்வாமியும் மற்றொருவரும் இருந்தார்கள். உடனே பலர் டாக்டர்களிடம் ஓடி இதைத் தெரிவித்தார்கள். ஒருவர் பின் ஒருவராக கால் மணிக்குள் நான்கு டாக்டர்கள் வந்து சேர்ந்தார்கள். ஏதோ சிகித்ஸை செய்தார்கள். ஜீவிதசேஷமிருந்தபடியால் உயிர் தப்பினேன். நான் மனோரதித்திருந்தபடி அன்றிரவு காஞ்சீபுரம் வந்து சேரமுடியவில்லை. மறுநாள் தென்னேரி உத்ஸவத்திற்கும் செல்ல முடியவில்லை. இச்செய்தி எங்கும்

பரவிவிட்டது. மேலே ப்ரஸ்தாவித்த D. ராமஸ்வாமி ஐயங்கார் அவர்கள் தென்னேரி உத்ஸவத்திற்கு வந்திருந்தவர் அங்கு என்னைக் காணுமல் விசாரித்திருக்கிருர். இந்த அநாரோக்யச் செய்தியைத் தெரிந்து கொண்டார்...... நாலு நாள் கழித்து மாசிப் பௌர்ணமியன்று ராஜிகுளத்தெப்ப உத்ஸவத்தன்று ராஜிகுளத்திற்கு D. R. ஸ்வாமி வந்திருக்கிருர். அந்த உத்ஸவத்திற்கும் என்னுல் செல்ல முடியவில்லை. காஞ்சீபுரத்து ஸ்வாமிகளை அங்கே இரவு கண்டு விசாரித்தார். அவர்கள் மூலமாக என்னுடைய ஸ்வல்ப ஆரோக்யத்தைத் தெரிந்து கொண்டு ஸந்தோஷம் என்று சொல்லிச் சென்ருர். அதற்கு மறுநாள் முதல் மூன்று நாள் இவ்விடத்தில் தேவப்பெருமாளுக்குத் தவனுேத்ஸவம். அதில் முதல் நாளே நான் கோஷ்டிக்குச் செல்ல ஆரம்பித்துவிட்டேன். இதை மறுநாள் காலை D. R. ஸ்வாமி சென்னையில் கேள்விப்பட்டாராம். அவர் அன்று மாலை சென்னையிலிருந்து புறப்பட்டுக் காஞ்சீபுரம் வந்துவிட்டார். அன்று தவனேத்ஸவம் இரண்டாம் நாள். இரவு 8 மணிக்குத் தேவப்பெருமாள் தவன உத்ஸவ மண்டபத்திலிருந்து வெளியில் எழுந்தருளின வுடனே இயல் தொடக்கமாகிறது. அங்கே நான் நின்று கொண்டிருக்கிறேன். D. R. ஸ்வாமி கோஷ்டியின் பின்னுல் நிற்கிருர். என்னுடைய அன்பர் ஒருவர் இவரை நோக்கி, "தேவரீர் நாளை உத்ஸவத்திற்குத் தானே எழுந்தருள்வது வழக்கம்! இன்றே எழுந்தருளினதற்கு என்ன விசேஷம்?" என்று கேட்க, அதற்கு D. R. ஸ்வாமி சொன்னதாக அவர் என்னிடம் சொன்ன வார்த்தையை இங்கு அநுவதிக்கும் போதும் மெய் சிலிர்க்கிறது. கண்ணநீர் பெருகுகிறது. அவரிடம் D. R. ஸ்வாமி ஸாதித்தாராம்.—"நம் ஸ்வாமி நேற்று கோஷ்டிக்கு எழுந்தருளினதாகக் கேள்விப்பட்டேன். இன்றே வந்து ஸேவிக்க வேணுமென்று தோன்றிற்று; அதனுல் ஓடி வந்தேன்"—என்ருராம். இது சொன்னவர் (வைகுண்டவாஸியான) ஸ்ரீமான் குன்றபாக்கம் அனந்தாண்பிள்ளை (ஸ்ரீசைலம்) கிருஷ்ணமாசாரியர். அப்போது கூட இருந்து கேட்டவர்கள் நால்வரைவர் "ஸ்வாமியிடத்தில் அவர்க்கு இவ்வளவு ப்ரேமமா?" என்று சொல்லி வியந்தனர். இது நடந்து ஒன்பது வருஷங்களுக்கு மேல் ஒன்பது மாதங்களாகிவிட்டது. இஃது ஒன்றே யன்று. இங்ஙனம் பலவுண்டு. இஃதொன்று போதும்.

நேற்று (25-11-73) இரவு இவரும் நானும் காரில் சென்றபோது கால்மணி காலத்தில் இரண்டு மணிகாலம் நடைபெற வேண்டிய ஸல்லாபங்கள் நடந்து விட்டன. பழைய செய்திகள் இவர்க்கு ஞாபகம் இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்வதற்காக மிகப்பழைய விஷயமொன்று ப்ரஸ்தாவித்தேன். (அதாவது) நேற்றைய தாததேசிகன் சாற்றுமுறை பல வருஷங்களுக்கு முன்பு நடந்தபோது பெருமாள் திருவீதிப் புறப்பாடு கண்டருளியான பிறகு ஆஸ்த்தானத்தில் எழுந்தருளியிருக்க திவ்யப்ரபந்தஸேவை தொடக்கமாயிற்று. அப்போது திருக்கார்த்திகைக்குப் பிற்பட்ட அநத்யயன காலமாகையால் திருவாய்மொழி நூற்றந்தாதி ஸேவையாகிறது. அர்ச்சகர்கள் நெடும்போது திருவாராதனேபக்ரமம் செய்யாமையால் அதையே திருப்பித் திருப்பிச் சேவித்து வருகிறோம். D. R. ஸ்வாமி எதிரே ஒரு கம்பத்தில் சாய்ந்து கொண்டு திருச்செவி சாற்றுகிருர். திருவாராதனம் முடிந்து ஸேவையும் முடிந்த பிறகு என்னருகே வந்து நூற்றந்தாதி எத்தனை தடவை திரும்பியிருக்கும்?" என்று அவர் கேட்க "மூன்று தடவை ஆகி நாலாந்

தடவை தொடங்க விருக்கையில் திருவாராதனம் முடிந்துவிட்டபடியால் ஸேவை யும் முடிந்துவிட்டது" என்றேன். இதைப்பற்றி நேற்று அவரிடம் ப்ரஸ்தாவித்து "இருபது வருஷங்களுக்கு முன் நடந்த இச் செய்தி திருவுள்ளத்தில் நினைவிருக் கிறதா?" என்றேன். உடனே "இருபது வருஷமல்ல; நாற்பது வருஷமாயிற்று" என்று ஸாதித்தார். உண்மையில் நாற்பது வருஷமாயிற்று. எனக்குப்போல் அவருக்கும் இது நினைவிருக்கிறதென்பதைத் தெரிந்துகொண்டு எனக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. பிறகு கார் செல்லும்போது உண்மையில் நான் மெய் மறந்திருந்தபடியால் எல்லாவற்றையும் விடாமல் எழுத வேணுமென்று ஆசை யிருந்தும் சிலவே எழுத முடிகிறது. முதல் வார்த்தை—"அக்னிஹோத்ர தாதா சார்யர் தேவரீரிடம் நெருங்கிப் பேசுகிறப்போலிருக்கிறதே! இப்போதைய விப ரீதச் செயலைப்பற்றி அவருக்கு ஹிதோபதேசம் பண்ணக்கூடாதா?" என்றேன். (D. R.) "செய்யாமலிருப்பேனா? அவருக்கு ஒரே வார்த்தை சொன்னேன். 'இதெல்லாம் என்னுடைய ஸொந்த அபிப்ராயமன்று' என்று ஒரு வரி எழுதி வெளியிட்டுவிடும் என்றேன். என்ன செய்கிறாரோ பார்ப்போம்" என்றார். அவ் வளவோடு அந்தப்பேச்சை விட்டுவிட்டேன். "தேவரீருக்கு இப்போது நேத்ர பாடவம் குன்றாமலிருக்கிறதா?" என்று கேட்டேன்.

(D. R.) 'நான் ஆபரேஷன் செய்துகொண்டதுமுதல் நன்றாகவே தெரி கிறது. அடிக்கடி உத்ஸவங்களுக்கு வந்து ஸேவிக்கிறேன். வருகிறபோதெல் லாம் தேவரீரையும் ஸேவிக்கிறேன்'' என்றார். "எழுத்து நன்றாகத் தெரிகிறதா" என்று கேட்டேன். (D. R.) "கோர்ட்டுக்குப் போய்க்கொண்டுதான் இருக்கிறேன். எழுத்துத் தெரியாமல் எப்படிப் போய்வர முடியும்? தேவரீர் அனுப்புமவற்றையும் வாசித்து வருகிறேன்" என்று சொல்லிவிட்டு 'இன்ன விஷயம் நேற்று வாசித் தேன்' என்று ஓர் விஷயத்தைச் சிரித்துக்கொண்டே அநுவாதம் செய்தார். அப்போது எனக்குச் சிறிது வெட்கமுண்டாயிற்று. அதுகிடக்க. உடனே எனக்கு மங்களாசாஸனம் செய்யத்தொடங்கினார். "தேவப்பெருமாளும் கோஷ்டியுமுள்ள வரையில் தேவரீர் ஜீவித்திருக்கவேணும்" என்று சொல்லி "வையம் மன்னி வீற்றி ருந்து" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தையும் சொல்லி அவ்விடத்து ஈட்டி லுள்ள நஞ்சீயர் ஐதிஹ்யத்தையும் ஸாதித்தார். அப்போது நான் மண்ணுலகில் இருப்பதாக நினைக்கவே முடியவில்லை. அப்போது நான் பெரிய திருமொழி யில் (திருக்கண்ணபுரப் பதிகம்) தெள்ளியீர் தேவர்க்கும் என்னும் பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் "நீர்மலி வையத்து நீடு நிற்பார்களே" என்ற விடத்து பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்துள்ள "அங்குப் போனால் தெள்ளியீர் இல்லையே" என்கிற ஸ்ரீ ஸூக்தியை 'நினைவூட்டி தேவரீர் ஆசாஸிக்கிறபடியே தான் எனக்கும் ஆசை' என்று பின்னையும் பல பல பேசினேன். என்னுடைய ஜாகை வாசலில் கார் வந்து சேர்ந்த பிறகும் எங்கள் ஸல்லாபம் ஓயவில்லை. காரை விட்டிறங்கிக் கீழே நின்றுகொண்டும் பேசிக்கொண்டிருக்கிறார். "அவிதித கதயாமா ராத்ரிரேவ வ்யரம்ஸீத் (உத்தர ராம சரிதே) என்னும்படியாக ஆகிறதோ என்றுகூட நினைத்தேன். தேஹோபாதியினால் அவரிடம் நியமனம் பெறாமலே சடக்கென உள்ளே போய்விட்டேன். இது இராச் சிந்தனையன்று, ப்ரத்யக்ஷாநுபவம், பரமானந்த ஸந்தோஹ மயமான அனுபவம்.

## குளித்தலையில் வேதபரீக்ஷை கொடுத்தது.

1930வது ஸம்வத்ஸரமென்று ஞாபகம். குளித்தலையில் ஸ்மார்த்தர்களின் வேதபாடசாலை வெகு சிறப்பாக நடந்துகொண்டிருந்தது. இப்போது எப்படியோ தெரியாது. 40 வருடங்களுக்கு முந்திய சரிதை நினைவிற்கு வந்ததை எழுதுகிறேன். அந்த வேதபாடசாலையில் வருஷாந்திரக் கொண்டாட்டமொன்று நடைபெறுகின்றது. மூன்று வேதங்களுமோதின கனபாடிகள் வந்திருக்கின்றார்கள். அந்த ஸமயத்தில் நான் திருவரங்கத்தில் இருந்தபடியால் என்னையும் அங்கு வரவழைத்தார்கள். ஸபையில் வேதபரீக்ஷைகள் நடந்துகொண்டிருக்கின்றன. அப்போது வேதத்தில் ஒரு உபந்யாஸம் செய்ய வேண்டுமென்று என்னைக்கேட்டுக்கொண்டார்கள். உடனே ஆரம்பித்து வெகு உத்ஸாஹமாகச் சொல்லிக்கொண்டு போகிறேன். இடையில் திருமங்கையாழ்வார் திருக்கோவலூர் பதிகத்தில் 5வது பாட்டில் "மறைவளரப் புகழ்வளர மாடந்தோறும் மண்டபமொண்டொளி யனைத்தும் வாரமோத" என்கிற அடியை எடுத்து விவரணம் செய்கிறேன். தொளியனைத்தும் என்பதற்கு 'வீதிதோறும்' என்று பொருள். அமரகோசத்தில் "ரத்யா ப்ரதோளிர் விசிகா" என்றுள்ளது. ப்ரதோளி என்பது வீதிக்கு ஒரு பெயர். அப்பெயரே "ப்ர" என்கிற உபஸர்கத்தைத் தள்ளி 'தோளி' என்றாகி, குறுக்கல் விகாரம் பெற்று 'தொளி'யென்றாகியுள்ளது. ஆகவே தொளியனைத்துமென்பதற்கு வீதிதோறும் என்று பொருளாயிற்று. "வாரமோத" என்கிற சொற்றொடர் இந்த ஓரிடந்தவிர வேறிடத்தில் கிடையாது. வாரஞ் சொல்லுவது என்கிற முறை வேதமோதியவர்களுக்கு மட்டுமே தெரியும். இது ஒரு விலக்ஷணமான பரீக்ஷாப்ரக்ரியை. வேத பரீக்ஷைகளில் கடினமானவொரு முறை கேளீர். வேதத்தில் வேஷ்டனபதம் என்பது ப்ரஸித்தமானது. "ப்ரஜாபதிரிதி ப்ரஜா-பதி:; பாகதேயேநேதிபாக — தேயேந ....." இப்படி சொல்லப்படுவதற்கு வேஷ்டனமென்பது பெயர். இதை அவக்ரஹமென்றும் சொல்லுவர்கள். ஆசார்ய சம்புவில் தேசிகனுடைய அத்யயனக்ரமத்தைச் சொல்லும் போது "புனருச்சாரணகாங்க்ஷீ பதானாம் வேஷ்டனே பரம்" என்று அற்புதமாகச் சொல்லியுள்ளார். தேசிகன் ஏகஸந்தாக்ராஹியாய் அத்யயனம் செய்து முடித்தார் என்று சொல்லுகிற ப்ரகரணமது. ஒருகால் சொன்னதை மறுகால் சொல்ல வேண்டாதபடி வேதமோதினார் என்று சொல்லி, ஆனால் மறுகால் சொல்ல வேண்டிய ப்ரஸக்தியுமுண்டு, அது வேஷ்டனத்தில் மட்டுமே என்று சொன்னவிது அற்புதமான விஷயமே. ப்ராஸங்கிகமானவிது நிற்க. வேதத்தில் வேஷ்டன பதங்கள் பல்லாயிரங்கள் வருகின்றன. அநுவாகங்களை பஞ்சாதி பஞ்சாதிகளாகப் பிரித்திருக்கிறார்களன்றோ! 50 பதங்கள் கொண்ட ஒரு பகுதியைப் பஞ்சாதி என்று வழங்குவர். "பஞ்சாசத்" என்கிற ஸம்ஸ்க்ருத பதமே பஞ்சாதி என்றாகியுள்ளது. ஏதோ சில பஞ்சாதிகள் தவிர மற்றெல்லாப் பஞ்சாதிகளிலும் வேஷ்டன பதங்கள் பல கிடக்கும். திடீரென்று ஒரு பஞ்சாதியைச் சொல்லி 'இதிலே உள்ள வேஷ்டன பதங்களை மட்டும் சொல்லு' என்பது ஒரு கடினமான பரீக்ஷை. "இஷேத்வோர்ஜேத்வா" என்கிற முதல் பஞ்சாதியையே எடுத்துக் கொள்வோம். இதில் உபாயவ:, ச்ரேஷ்டதமாய, தேவபாகம், ப்ரஜாவதீ:, அக

சகும்ஸ:; கோபதௌ, இப்பதங்கள் மட்டுமே வேஷ்டன பதங்களாக உள்ளன. பஞ்சாதியை வரிசையாகச் சொல்லிக்கொண்டு போனால் அந்த வேஷ்டனங்கள் நமது வாயில் வருமேயொழிய அப்பதங்களைமட்டும் சொல்லு என்றால் ச்ரமப்பட வேண்டியதேயாகும். ஆனால் இவ்விதமான பரீக்ஷையும் நான் கொடுக்கிறேன் என்று அவ்விடத்தில் (குளித்தலை ஸபையில்) துணிந்து சொன்னேன். உடனே அவர்களில் தலைவரானவர் 3—2—7 சொல்லும் என்றார். அதாவது மூன்றாவது காண்டத்தில், இரண்டாவது ப்ரச்னத்தில் ஏழாவது பஞ்சாதியிலுள்ள வேஷ்டன பதங்களை மட்டும் சொல்லும் என்றபடி. உடனே நான் அந்த பஞ்சாதியை இரண்டு நிமிடத்தில் மனதில் மனனம் செய்துவிட்டுச் சொல்ல ஆரம்பித்தேன். "பரிபூரிதி பரி — பூ:". "பரிபூரிதி பரி — பூ:". "பரிபூரிதிபரி — பூ:", பரிபூரிதி பரி — பூ:" என்று சொல்லிக்கொண்டிருக்கிறேன். வேதமோதாதவர்களும் அங்குப் பலர் கூடியிருக்கிறார்களே! அவர்கள் "இவரென்ன சொன்னதையே சொல்லிக்கொண்டிருக்கிறாரே" என்கிறார்கள். கனபாடிகளோ வியந்து கேட்கிறார்கள். அப்பஞ்சாதியிலுள்ள வேஷ்டன பதங்களை மட்டும் சொல்லி முடித்து விட்டேன்.

உடனே மற்றொரு வைதிகர் 5—4—5 என்கிறார். அதாவது 5 வது காண்டத்தில் 4-வது ப்ரச்னத்தில் 5-வது பஞ்சாதியிலுள்ள வேஷ்டன பதங்களை மட்டும் சொல்லும் என்றபடி. உடனே ஸம்ஹிதையை இரண்டு நிமிஷம் மனனம் பண்ணிவிட்டு,

"த்வந்த்வமிதி த்வம் - த்வம்,
த்வந்த்வமிதி த்வம் - த்வம்,
த்வந்த்வமிதி த்வம் - த்வம்" என்று

சொல்லிக்கொண்டு போகிறேன். ........... இது ஒரு கடினமான பத்ததி. இந்த பத்ததியிலும் பழக்கம் செய்திருந்தேன். இப்போது எப்படி என்று கேட்டால் இது ஜன்மாந்தர ஸமாசாரம் என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. மற்றொன்று கேளீர்!

## மலையாளச் சித்தூரில் பாராயணம்.

மலையாளச்சித்தூரென்பது எர்ணாகுளத்தருகில் ஒரு ப்ரஸித்தமான ஊர். அங்கே மிகப் பெரிய ஸம்ஸ்க்ருத காலேஜ் உள்ளது. அதில் பெரும்பாலும் ஸகல சாஸ்திரங்களும் ப்ரவசனமாகி வருகிறது. அதில் வேதபாடசாலையும் நடந்து வருகிறது. ப்ரக்ருதம் சதாப்தீ மஹோத்ஸவம் கண்டருளுகிற ஸ்ரீகாஞ்சீ ஜகத்குரு காதி ஸ்வாமி கஜதுரகபதாதிகளுடனும் ஸ்ரீ வைஷ்ணவ பரிவாரங்களுடனும் மலைநாட்டுத் திருப்பதி யாத்திரையாக எழுந்தருளினபோது நானும் கூடவே சென்றிருந்தேன். திருக்காட்கரை, திருமூழிக்களம் சேவிக்குமளவிலே அந்தச் சித்தூருக்குச் செல்ல நேர்ந்தது. ஸ்ரீ ஸ்வாமிக்கு அந்தவிடம் திருவுள்ளத்துக்கு மிக உகப்பாக இருந்தபடியால் இரண்டு நாள் அங்கே தங்கியிருக்க நேர்ந்தது. கூடவே நானும் இருக்கிறேன். அவ்வூரில் வைதிகர்கள் ஐம்பது அறுபது பேர்கள் காணப்பட்டார்கள். அவ்வூர் ஸ்திரவாஸிகளோடு கூட வெளியூர் வைதிகர்களும்

சேர்ந்திருப்பர்கள். அப்போது அங்கொரு உத்ஸவம் நடைபெறுகிறது (இது 50 வருடங்களுக்கு முந்திய செய்தி) ஒரு விக்ரஹத்திற்கு உத்ஸவமன்று. வைதிகர்கள் கூடி க்ரம பாராயணம் செய்து வருகிறார்கள். 44 நாள் நித்யம் ஒரு ப்ரச்னம் வீதம் 44 ப்ரச்னங்களையும் வீதியில் க்ரம பாராயணம் செய்வது என்று ஸங்கல்பித்து நடந்துவருகிறது (இது இப்போதும் நடந்து வருவதாகக் கேள்விப்படுகிறேன்) அந்த க்ரம பாராயணத்தின் ப்ரக்ரியை எப்படிப்பட்டது என்றால் 50 பேர்களில் 49 வைதிகர்கள் ஒரு கக்ஷி சொல்வது. ஒருவர் மட்டும் மற்றொரு கக்ஷியைச் சொல்வது. இடையில் அவர் ஏதேனும் தவறிவிட்டால் — (ஏதோ நியமம் வைத்திருந்தார்கள்...... இப்போது நினைவுக்கு வரவில்லை....). நான் அங்கிருந்த இரண்டு நாள்களில் ஒருவர் மட்டும் பாராயணம் செய்கிற கக்ஷியில் நான் சேருகிறேன் என்று சொன்னேன், வைஷ்ணவர்களில் இப்படிச்சொல்லுமவர்கள் இருப்பதாகக் கேள்வியில்லையே என்றார்கள். நான் சொல்லுகிறேன் பாருங்கள் என்றேன். ஸ்ரீரங்கத்தருகிலிருக்கும் லால்குடியென்கிற ஊரிலிருந்தும் இரண்டொரு கனபாடிகள் வந்திருந்தார்களங்கு. அவர்கள் எனக்கு ஏற்கனவே பரிசிதர்கள். அவர்கள் "இந்த ஸ்வாமிகள் ஸ்ரீரங்கத்திற்கு அடிக்கடி வந்திருக்கிறார்கள். அங்கு பாராயணம் செய்யக் கேட்டிருக்கிறோம். சொல்லக்கூடியவர் தான்'' என்றார்கள். பிறகு பாராயண கோஷ்டி புறப்பட்டது. அப்போது ஆறுவது காண்டத்தில் ஏதோ ஒரு ப்ரச்னம் நடக்கிறது. 49 கனபாடிகள் ஒரு கக்ஷியைச் சொல்லுகிறார்கள். நான் மட்டும் ஒரு கக்ஷியைச் சொல்லி அவர்களை உகப்பித்தேன். அந்தக்காலங்களை இப்போது கனவாகவும் நினைக்க முடியவில்லை ..................

## அடியேனுடைய வேதாத்யயனமும்–பாடசாலா ப்ரதிஷ்டாபனமும்

அடியேனுக்கு வேதமோத வேணுமென்கிற ருசி இளமையிலிருந்தே தீவ்ரமாயிருந்தது பலதடவை பலபேர்களிடத்தில் ஆரம்பிப்பதும், இரண்டொரு வாரம் சந்தை நடப்பதும், ஆவ்ருத்திபண்ணுவதற்கு அவகாசமில்லாமல் நின்றுபோவதுமாகவே நிகழ்ந்தது. இருபத்திரண்டாவது வயதில் திருமலையில் ஒரு உத்ஸவத்திற்கு விடைகொள்ள நேர்ந்தது. ஸ்ரீமதுபயவே, திருமலை விஞ்சிமூர் மாம்பள்ளம் ஸுதர்சநாசார்ய ஸ்வாமி யென்பவர் கோயில் வாஸத்தையே ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கொண்டு அங்கே வாழ்ந்துவருபவர் திருமலையப்பனை ஸேவிக்க அப்போது அங்கெழுந்தருளியிருந்தார். அந்த ஸ்வாமியின் யோக்யதை அப்ரமேயமானது. அந்த ஸ்வாமி திருமலையில் வேதகோஷ்டியில் நடு நாயகமாக ஸேவை ஸாதித்துக் கொண்டு ஆச்சரியமாகப் பாராயணம் செய்துபோருகிறார். அவருடைய தனிப்பட்ட கண்டத்வநியானது அடியேனை மிகவும் ஆகர்ஷித்து விட்டது. ''ப்ரஹ்மப்ரயத்நம் செய்தாவது இந்த ஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்று பலவித்யார்த்திகளைச் சேர்த்துக்கொண்டு வேதத்தைப் பூர்த்தியாக ஓதியே தீருவது''என்று அதே க்ஷணத்தில் த்ருடஸங்கல்பம் செய்துகொண்டேன். உடனே

அந்த ஸ்வாமி திருவடிகளில் விழுந்து அடியேனுடைய மநோரதத்தை விரிவாக விஜ்ஞாபனம் செய்து பிரார்த்தித்தேன். "அவ்யாக்ஷேபோ பவிஷ்யந்த்யா: கார்ய ஸித்தேர்ஹி லக்ஷணம்" என்று காளிதாஸர் (ரகு. 10-7) சொன்னபடி அந்த ஸ்வாமி அடியேன் பிரார்த்தனைக்கு ஈஷத்தும் தடை சொல்லாமல் "அப்படியே செய்வது, இப்போதே புறப்படுவது" என்று மஹோத்ஸாஹத்துடன் ஸாதித்து மறுநாளே அடியேனோடு கூடவே புறப்பட்டுக் காஞ்சிக்கு எழுந்தருளினர்.

அந்த முஹூர்த்த விசேஷத்தின் நன்மையை ஆரே யறிவார்? ஊர்வந்தவுடனே வேதமோதத் தொடங்கவேணுமென்கிற ருசி புஷ்கலமாக இருந்தும், ஏற்கெனவே சில தடவைகள் ஆரம்பித்து விச்சின்னமானது போலல்லாமல் முற்ற முடிய நடைபெறவேண்டிய மார்க்கத்தைத் தேடியே ஆரம்பிக்கவேணுமென்று கருதி, உபயவேதவேதாந்த பாடசாலையொன்று ஸ்திரமாக நடப்பதற்கு வழி தேடினேன். பேருளாளனும் பெருந்தேவித்தாயாரும் பரிபூர்ண கடாக்ஷம் செய்தருளி வித்யாசாலையின் நிர்வாஹத்திற்குரிய ஸகல உபபத்திகளை ஸங்கல்பித்தருளினபடியாலே தைர்யமுண்டாகி ஒரு நன்னாளில் ஸ்ரீமத்பரமஹம்ஸ (மாதாமஹ) ஜீயர்ஸ்வாமிமடத்தையே தாத்காலிக வித்யா நிகேதனமாக்கி வேதாத்யயநம் உபக்ரமித்தாயிற்று. ஆரம்பத்தில் முப்பது வித்யார்த்திகளுக்குமேல் சேர்ந்தார்கள். வயது சென்றவர்களுக்குங்கூட இதில் அந்வயித்து வேதமோத வேணுமென்கிற ருசியுண்டாகி அன்னவர்களும் சேர்ந்தார்கள். அவர்களும் இரண்டொரு காண்டங்கள் அதிகரித்துச் சிலவாண்டுகள் ஸன்னிதிகளில் வேத பாராயண கைங்கரியத்திலும் அந்வயித்தனர்.

மூலம் அசீதியையும் சொல்லி முடித்த பிறகு பதமும் க்ரமமும் ஓதுவது எங்குமுள்ள வழக்கம். அவ்விதமாக அத்யயனம் செய்தால் பகவத் ஸந்நிதிகளில் திருவீதிப் புறப்பாடுகளில் க்ரமபாராயண கைங்கரியம் செய்ய மிகவும் தாமதமாகுமென்று உபாத்யாயஸ்வாமி ஸம்ஹிதையோடு கூடவே பதக்ரமங்களையும் ஓதுவித்த அதிசயம் தனிப்பட்டது. பலர் மூன்றாவது காண்டத்தை முதலில் ஆரம்பிப்பர்கள்; அப்படியல்லாமல் முதல்காண்டமே பிடித்து வரிசையாக பதக்ரமங்களோடு கூடவே ஸம்ஹிதையையும் பிறகு ப்ராஹ்மணத்தையும் அதிகரிப்பித்தார் மாம்பள்ளம் ஸ்வாமி.

இருபத்திரண்டு வயதுக்குமேல் அடியேன் வேதமோதத் தொடங்கினபடியால் அப்போது பலரும் பரிஹஸிப்பதும் நிந்திப்பதுமாயிருந்தார்கள். இத்தனை வயிதுக்குமேல் வேதம் நன்றாக வரும்! என்று சிலர் பரிஹஸிப்பர்கள்; நமக்கு ஸ்வரூப ப்ராப்தமல்லாத கர்மகாண்டத்திலோ இப்போது கைவைப்பது! என்னே!' என்று சிலர் நிந்திப்பர்கள். "லோகோ பிந்நருசி:" ஆகையாலே ஆமோதித்தவர்களுமுண்டு. முக்கியமாக அடியேன் கைங்கரியத்தையே ப்ரதாந லக்ஷ்யமாகக் கொண்டு வேதாத்யயனமாரம்பித்தேன். காஞ்சீபுரியில் திவ்யதேசங்கள் பல. அவற்றில் உத்ஸவங்களும் அடிக்கடி ப்ராப்தமாகும். தேவப்பெருமாள் ஸந்நிதியொன்று தவிர மற்ற ஸந்நிதிகளில் வேதபாராயணம் அடியோடு இல்லாமலே உத்ஸவங்கள் நடந்துவந்தன. அந்தக் குறை தீர்ந்தது.

# பதரிகாச்ரம மார்க்கத்தில் கண்ட அதிசயங்களில் ஒன்று

ஹரித்வார ஹ்ருஷீகேசம் வரையில் வடநாட்டு க்ஷேத்ர தீர்த்த யாத்திரை இருபத்துமூன்று பர்யாயங்கள் செய்திருப்பதையும் பதரிகாச்ரம யாத்திரை மூன்று பர்யாயம் செய்திருப்பதையும் பலகால் தெரிவித்திருக்கிறேன். அக்காலங்களில் ஸ்ரீநகர்வரையிலுமே பஸ் போக்குவரத்து இருந்தது. அதற்கு மேல் போவதற்கு டோலிமுதலான ஸாதனங்கள் இருந்தபடியால் டோலி பேசிக் கொண்டு அதில் செல்வேன். ஆனாலும் வழியின் அழகைப்பார்த்ததில் டோலியில் உட்கார மனமில்லாமல் பெரும்பாலும் நடந்தே செல்வேன். வடநாட்டுத்திருப்பதிப்பாசுரங்களை அரையர் ஸேவைபோல ஸேவித்துக் கொண்டே செல்வேன். கூட வருபவர்கள் ஆனந்தமாகக் கேட்டுக்கொண்டு வழிநடக்கிற ச்ரமம் தெரியாமலே வருவார்கள். அது வொரு பேரின்ப வெள்ளம். அதைப்பற்றிமட்டும் எனதுபத்திரிகைகளில் பலகால் எழுதியிருக்கிறேன். அந்தவழியில்கண்ட அதிசயங்கள் எண்ணிறந்தவை. அவற்றில் ஒன்று கேண்மின்.

பதரீநாத் வரையில் வழிமுழுவதும் தந்திக்கம்பங்கள் நடப்பட்டிருக்கின்றன. அந்த ஆச்சர்யம் வாசாமகோசரம். சிலகம்பங்கள் சூரியமண்டலத்தின் பக்கத்தில் தென்படும்; சில கம்பங்கள் முந்நூறு நானூறு அடிகளுக்குக் கீழே தென்படும். சிலகம்பங்கள் நாம்போகிற வழியிலேயே கையால்தொட்டுக் கொண்டுபோகும் நிலைமையிலேயே யிருக்கும். இவ்வாறு எப்படித்தான் நட்டார்களோ என்றுமிகமிக ஆச்சர்யப்படுவேன். இதேபோல என்னுடைய இரவுநினைவுகள் சில ஒருவாரத்திற்குட்பட்ட விஷயங்களைப் பற்றியனவாகும்; சில்சிந்தனைகள் முப்பது நாற்பது வருடங்களுக்கு முற்பட்ட விஷயங்களைப் பற்றியனவாகும். சில சிந்தனைகள் எனது ஐந்தாறுபிராயத்தின் நிகழ்ச்சிகளைப் பற்றியனவாகும். இப்படி மாறிமாறி நினைவுகள் வருவதை நோக்கியே மேலே குறித்த தந்திக்கம்பங்களின் நிலைமை இங்கு எழுதலாயிற்று. இச்சிறுநூல் நான் எழுதத்தொடங்கினபிறகு இராக்காலச்சிந்தனைகள் மிகமிக அதிகமாய்விட்டன. ஓரிரவில் ஆயிரம் சிந்தனைகள் என்றாலும் மிகையாகாது. எதைமுன்னம் எழுதுவது எதைப்பின்னை எழுதுவது என்று தோன்றாமல் திகைக்கிறேன். எல்லாவற்றையும் ஒரே நிமிஷத்தில் கொட்டிவிடவேணுமென்று ஆசை கிளர்கின்றது. அஃது எங்ஙனே முடியும்? வடமொழியில் ''வாச: க்ரமவர்த்தித்வாத்'' என்றொரு வசநமுண்டு. சொல்லவேண்டியவற்றை வரிசையாகத்தானே சொல்லியாக வேண்டும் என்பது அதன்கருத்து. திருவாய்மொழி மூன்றாம்பத்தில் *ஒழிவில்காலப்பதிகத்திற்கு அடுத்த பதிகம் *புகழுநல் லொருவனென்கோ என்பது. இப்பதிகம்முழுவதும் என்கோ! என்கோ! என்கோ! என்கோ! எனவருகின்றது. ''எம்பெருமானை அப்படிச் சொல்லுவேனா! இப்படிச்சொல்லுவேனா'' என்று அலமருகின்றார் ஆழ்வார். பூமி என்கோ-பரவை என்கோ-தீ என்கோ-வாயுவென்கோ-நிகழுமாகாசமென்கோ........இப்படியன்றோ இப்பதிகத்தில் பாசுரங்கள் இருப்பது! இப்பதிகத்தின் ஈட்டுப்ரவேசத்தின் முடிவிலுள்ள ஒருவாக்யத்தை விவரிக்கிறேன். ஒருவர் தமது மாந்தோப்பில் ஏராளமானபழங்கள் பழுத்திருப்பதைக் கண்டார். ஆயிரக்கணக்கான பழங்கள் இருந்தன. நாளைக்குப்பறிப்போம் என்றிருந்தார். அன்றிரவு ஓர்பெருங்காற்றடித்தது. அதனால் பழங்கள்யாவும் உதிர்ந்து கீழேவிழுந்து

விட்டன. தோட்டக்காரர் ஓடிவந்துபார்க்கிறார். அப்பழங்களை எடுத்து உள்ளே கொண்டு போகவிரும்புகிறார். எதை முன்னே எடுப்பது எதைப் பின்னே எடுப்பது என்று தோன்றாமல் திகைத்து நிற்கிறார். ஆனாலும் கைப்பட்டதை எல்லாம் எடுக்கிறார். நானும் இதே கதையாய் எதை முன்னம் சொல்வது எதைப் பின்னே சொல்வது என்று தோன்றாமல் நினைவிற்கு வந்தவற்றைச் சொல்கிறேன். என் முன்னேயிருந்து எழுதுகிறவர் எழுதுகிறார்.

## ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள்

ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸத்யஸங்கல்ப பிருதாங்கிதரான இந்தஸ்வாமியை அறியாதார் இல்லையே. இந்தஸ்வாமி நேற்றுபங்குனிமாதத்தில் டில்லிமாநகரில்நிகரற்ற வேள்வியொன்று நிகழ்த்தினார். அப்போதுநான் அவ்விடம் போயிருந்தேன். முடிவில் ஸ்வாமியிடம் ஒன்று விண்ணப்பம் செய்தேன். "அடுத்த வருஷத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் ஒருபெரியவிசேஷம் நடத்தவேணும்" என்று. அங்கீகாரஸூசகமாகப் புன்முறுவல் பூத்தார்.

இரண்டொரு வருஷத்தில் செய்வர் என்று நினைத்தேன். நான் ப்ரார்த்தித்தது பங்குனிமாத முடிவுதேதியில். அடுத்தபங்குனிமாதத்திலோ அதன்பிறகு சித்திரை வைகாசியிலோ நடத்துவார் என்று எண்ணினேன். ஆனால் ஜீயர்ஸ்வாமி திருவுள்ளத்தில் அந்தக்ஷணம் முதலாகவே மனோரதப்ரவாஹங்கள் பெருகத்தொடங்கிவிட்டன. அடுத்தஆனிமாதத்தில் இதைப்பற்றி ஆலோசிக்கத்திருவுள்ளம் பற்றி திருமலைதிருப்பதியிலிருந்து அவர் காஞ்சிக்கு எழுந்தருளினபோது நான் நேத்ர சிகித்ஸை ஆலோசனைக்காகச் சென்னைக்குச் சென்று அங்கே பூந்தமல்லி ஹைரோட்டில் எனது பரமாப்தரான ஸ்ரீமான் உ.வே. M. A. ரங்காசாரியார் ஸ்வாமியின் பங்களாவில் தங்கியிருந்தபடியால் விசாரித்துக்கொண்டே அங்கு எழுந்தருளிவிட்டார் ஜீயர்ஸ்வாமி-ஸ்ரீபெரும்பூதூர் விஷயமாகப் பலபலவார்த்தைகள் நிகழ்கின்றன. அவ்வூருக்குத் திலகமாக அறுபது ஸம்வத்ஸரத்திற்குமுன் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் உபயவே. சதுச்சாஸ்த்ரவித்வந்மணி. குண்டலம் நரஸிம்ஹாசாரிய ஸ்வாமியை ப்ரஸ்தாபித்து சிலவார்த்தைகள் சொல்லிவருகையில் என்னுடைய பதின்மூன்றாவது ப்ராயத்தில் அங்கு நடந்ததொரு விநோதத்தை விஜ்ஞாபித்தேன். [அதாவது]

## ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியும் பாலவேடு பண்டிதரும்

சித்திரைமாஸம் ஸ்வாமி உத்ஸவத்திற்கு அடியேன் திருந்தகப்பனாரோடு கூட ஸ்ரீபெரும்பூதூருக்கு விடைகொண்டிருந்தேன். திருவள்ளூர் ஸமீபத்தில் பாலவேடு என்றொரு அக்ரஹாரம். அங்கே ரங்கராமாநுஜாசாரியர் என்பவர் ஒரு வடகலைவித்வான். அவர் ஸ்வாமிஉத்ஸவம் ஸேவிக்க ஸ்ரீபெரும்பூதூர் வந்திருக்கிறார். ஸ்வாமிக்குத் திருவீதிப் புறப்பாடு நடந்து கொண்டிருக்கிறது. வேதபாராயண கோஷ்டிக்குப் பின்னால் குண்டலம் ஸ்வாமி தம்முடைய சிலவித்யார்த்திகளோடு எழுந்தருளுகிறார். மேலே சொன்ன பாலவேடுவித்வான் அங்கே வந்து குண்டலம் ஸ்வாமியோடு வார்த்தையாடுகிறார். பலவார்த்தைகளினிடையில் அவர் ஒரு கேள்விகேட்கிறார் குண்டலம் ஸ்வாமியை. (என்னவென்றால்) ஸ்ரீபெரும்

புதூரில் தினப்படியாக இரண்டுவேளைகளிலும் உடையவர் வாழிதிருநாமங்களாக மூன்று பாசுரங்கள் ஸேவிக்கப்பட்டு வருகின்றன. 'சீராருமெதிராசர் திருவடிகள் வாழி' 'அறுசமயச் செடியதனை அடியறுத்தான்வாழியே' 'சங்கர பாக்கரயாதவ பாட்டப்ரபாகரர் தங்கள் மதம் சாய்வுற' என்பனவே அவை. மணவாளமாமுனிகள் அருளிச் செய்த ஆர்த்திப்ரபந்தத்தில் உள்ளவை இப்பாசுரங்கள். பாலவேடு வித்வான் கேட்கிறார்—"அறுசமயச் செடியதனை அடியறுத்ததாக முதலில் சொல்லியிருக்கிறது. அடுத்த பாசுரத்தில், சங்கரர் பாஸ்கரர்—யாதவர்—பாட்டர்—ப்ரபாகரர் ஆகிற ஐவரைமட்டும் சொல்லியிருக்கிறதே, என்ன திருவுள்ளம்?" என்று கேட்கிறார். குண்டலம்ஸ்வாமி 'அறுசமயப் பாசுரத்திற்கு சங்கரபாக்கரபாசுரம் வ்யாக்யானமா என்ன? இதுஎன்னகேள்வி?' என்று ஸாதிக்கிறார். அப்போது அங்கேயிருந்த அடியேன் பாலவேடுவித்வானை நோக்கி "ஸ்வாமி! சங்கரபாக்கர பாசுரத்திலும் ஆறுமதஸ்தர்கள் சொல்லப்பட்டிருக்கிறார்களே" என்றேன். 'இல்லையே, ஐந்துதானே இருக்கிறது' என்கிறார் பால வேடுவித்வான். அதற்கு அடியேன் "சங்கரபாக்கரயாதவபாட்டப் பிரபாகரர்களுக்குப் பிறகு 'தங்கள் மதம்' என்றிருக்கிறதே, அதை நோக்கவில்லையா" என்றேன். தங்கள் மதம் என்றால் என்ன? என்றார். "ஒருவர் தேவரீரை நோக்கித் தங்கள் வீட்டில் எல்லாரும் ஸௌக்யமா என்று கேட்டால் 'தங்கள்' என்பதற்கு என்ன அர்த்தம்? என்றேன். 'உங்கள் வீட்டில் என்று அர்த்தம்' என்றார். "அதைத்தான் அடியேனும் சொல்லுகிறேன். உங்கள் மதத்தையும் சேர்த்தால் ஆறு மதமாய்விடவில்லையா என்றேன்". அதற்கு அந்த ஸ்வாமி முகம் சிவந்து எங்கள் மதத்தையுமா உடையவர் சாய்த்தார் என்கிறார். "அது எனக்குத் தெரியாது; பாசுரத்தின் அர்த்தம் இது தான் என்றேன் நான். உடனே இந்த பிள்ளையாண்டான் யார் என்கிறார். முன் கோஷ்டியில் எழுந்தருளிரே ஜீயர்ஸ்வாமி, அவர் பேரன் என்கிறார்கள்........மேல் நிகழ்ச்சியிருக்கட்டும். இது அறுபத்தொன்பது வருஷங்களுக்குமுன் நிகழ்ந்தது. இதை ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமியிடம் ப்ராஸங்கிகமாக விஜ்ஞாபித்தேன். இதைக்கேட்டு அவர் சிரித்துக்கொண்டே ஸாதித்த வார்த்தை சுவை மிக்கது. [அதாவது] இளையபெருமாளைப்பற்றி ஸ்ரீராமாயணத்தில் "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்றது; லக்ஷ்மணன் பால்யமே பிடித்து பெருமாளிடத்தில் ஸுஸ்நிக்தராய் இருந்தாப்போலே தேவரீரும் பால்யமே பிடித்து துர்வாதி கர்வ நிர்வாபணத்தில் ப்ரக்யாதி பெற்றுப்போல் இருக்கிறது என்று ஸாதித்தார். அதை ஒரு மங்களாசாஸனமாகக் கொண்டேன்.

# ஸ்ரீ ஜீயர் ஸ்வாமியின் இன்றைய ஸ்ரீமுகமும் அடியேன் பதில் விண்ணப்பமும்

மேலே ப்ரஸ்தாவித்த ஜீயர் ஸ்வாமி தற்காலம் திருவரங்கம் பெரிய கோயிலில் (ஸ்ரீரங்கத்தில்) விச்ராந்தியாக எழுந்தருளியிருக்கிறார். அந்த ஸ்வாமிக்கு விச்ராந்தி என்பது திருமேனிக்குச் சிறிது இருக்கலாமே ஒழிய, திருவுள்ளத்தில்

ஓடும் மனோரதப்ரவாஹங்களுக்கு ஒரு நொடிப் பொழுதும் விச்ராந்தி இராது. இப்போது ஸ்வாமி திருவுள்ளத்தில் இரண்டு மனோரத ப்ரவாஹங்கள் பெருவெள்ளமாகப் பெருகிக் கொண்டிருக்கின்றன. (1) ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஸகல பூர்வாசார்ய க்ரந்தங்களையும் ஸம்ஸ்க்ருத, த்ராவிட, ஆந்த்ர லிபிகளில் ஸபரிஷ்காரமாக அச்சிடுவிக்க வேணுமென்றும், ஸாத்யமான வரையில் ஆங்கிலத்திலும்கூட மொழி பெயர்த்து ஆயிரக்கணக்கான பிரதிகள் அச்சிடுவிக்கவேணும் என்பதும் ஒன்று. இதற்காக பன்னிரண்டு லக்ஷம் ரூபாய் திரட்ட திட்டமிட்டிருக்கிறார். (2) நமது நாட்டிலுள்ள ஸகல தேவாலயங்களையும் விலக்ஷணமாக ஜீர்ணோத்தாரணம் செய்யவும் சாச்வத நிர்வாஹத்துக்குரிய சேமவைப்பு ஏற்படுத்தவும் கோடிக் கணக்கான ரூபாய் திரட்ட திட்டமிட்டிருக்கிறார். இவை இரண்டும் நம்போல்வார்க்கு நெஞ்சால் நினைப்பரிது. ஸ்வாமிக்கு மனோரத ஸமயம் வேறு பல பர்யந்தமாகிற ஸமயம் வேறு என்பது கிடையாது. அதுகொண்டே அடியேன் இந்த ஸ்வாமியை ஸத்ய ஸங்கல்பரென்று நெடுநாளாக வழங்கிவருகிறேன்.

## ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிக்கு இன்று அடியேன் விடுத்த விண்ணப்பத்தின் ஒரு பகுதி

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸத்யஸங்கல்ப ஸ்வாமிநாம் ஸந்நிதௌ தாஸஸ்ய ஸப்ரணாமம் விஜ்ஞாபனம். நித்யபூர்:. நாச்சியார் திருமொழியில் *கருப்பூரம் நாறுமோ என்கிற பதிகத்தில் ஐந்தாவது பாசுரம்—"உன்னோடுடனே ஒரு கடலில் வாழ்வாரை, இன்னாரினையாரென்று எண்ணுவாரில்லை காண், மன்னாகி நின்ற மதுசூதன் வாயமுதம், பன்னாளும் உண்கின்றாய் பாஞ்சசன்னியமே" என்பதாம். எம்பெருமானுடைய திருக்கையில் நிச்சலும் விளங்குகிற அவனது திருப்பவளத்தை அநுபவிக்கின்ற ஸ்ரீ பாஞ்சஜன்யத்தின் ஒப்புயர்வற்ற பாக்யத்தைக் கொண்டாடும் பாசுரமிது. பாஞ்சஜன்யமாவது சங்கு. அது கடலில் தோன்றியது. கடலில் வாழ்வது இது ஒன்றன்று. இன்னமும் பலபல உள்ளன. ஆனால் அவற்றையெல்லாம் ஒரு பொருளாக மதிப்பார் இல்லை. மதுசூதன் வாயமுதத்தை இடைவீடின்றி உண்கின்ற சங்கின பாக்யம் என்னே! என்னே! என்கிறாள் ஆண்டாள். ஸ்வாமி அவதரித்த இடம் எனக்குத் தெரியும். கிழக்கு கோதாவரிப் ப்ராந்தத்தில் (த்ராக்ஷாராமம்) அர்த்தமூர் என்கிற அக்ரஹாரம். அங்கு ஸ்வாமி ஒருவர் மட்டுமா அவதரித்தது? எத்தனையோ பேர்கள் பிறந்தார்கள். பிறந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களை இட்டெண்ணுவார் ஆர்? தேவரீருடைய அதிமாநுஷ க்ருத்யங்கள் எத்தனை? அதிதைவ க்ருத்யங்கள் எத்தனை! (இவ்வபிப்ராயத்தில் விரிவாக விண்ணப்பம் செய்தேன்.)

## ஆழ்வார் திருநகரி விசேஷங்கள்

அடியேனுடைய வாழ்நாளில் இதுகாறும் ஆழ்வார்திருநகரிக்கு ஐம்பது தடவைகள் விடைகொண்டிருக்கிறேன். முதல் பர்யாயம் அங்கு விடை கொண்டபோது அவ்விடத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ அப்பன் ஜீயர் ஸ்வாமி என்கிற மஹான் எழுந்தருளியிருந்து பகவத் விஷயம் காலக்ஷேபம் ஸாதிக்கிறார். அந்த ஸ்வாமியின்

பாண்டித்யம் ஒப்புயர்வற்றது. பாசுரத்தின் பொருளை விவரிக்கும்போது ஈட்டிலுள்ள அர்த்தங்களைப் பெரும்பாலும் ஸாதிக்கிறார். ஈடு ஸாதிக்கும்போது அரும்பத விளக்கத்திலுள்ள விசேஷங்களை விவரிக்கிறார். அடியேன் மிக்க இளமையில் கேட்டவன். அப்போது நெஞ்சு கனிந்ததைப்பற்றி என்ன எழுதுவேன்! அந்த ஸ்வாமி ஸந்நிதியில் காலக்ஷேபம் கேட்ட ஆழ்வார் அம்மா என்கிற வயது சென்ற ஒருத்தி ஒரு சமயம் ஸ்ரீபெரும்பூதூர் உத்ஸவத்திற்கு வந்திருந்து ஆங்காங்கு நின்று கொண்டே மூவர் நால்வரிடையே ஏதோ விஷயங்கள் சொல்ல ஆரம்பிப்பாள். பத்து நிமிஷத்தில் நூற்றுக்கணக்கான ச்ரோதாக்கள் சிறியார் பெரியார் என்கிற வாசியில்லாமல் கூடிவிடுவார்கள். அது ஒரு ஆச்சரியமான சமயம். 1937 ஆம் வருஷத்தில் நவம்பர் மாதத்திலும் 1938 ஆம் வருஷத்தில் பிப்ரவரி மாதத்திலும் ஆழ்வார்திருநகரி சென்றிருந்து ஆசார்ய ஹ்ருதய ப்ரவசனம் செய்தேன்.. அப்போது ஒரு நாளைய அற்புதம். ஒரு துவாதசி பின்மாலை ஐந்து மணிக்கு நான் தாம்ரபர்ணியில் நீர்த்தயாடிக் கொண்டிருக்கிறேன். அப்போது இரண்டு மூன்று கிழவிகள் பாரணை செய்துவிட்டு ஆற்றில் கை கழுவ வந்திருக்கிறார்கள். 'ப்ரஸாதப்பட்டாயிற்றா என்ன?' என்று கேட்கிறேன். 'இன்று துவாதசி ஆச்சே. பாரணையாயிட்டுது' என்றார்கள். 'துவாதசி ஆனாலும் ஸூர்யோதயம் ஆகவேண்டாமா?' என்றேன். அதற்கு அவர்கள் 'ஸ்வாமி! ஆசார்யஹ்ருதயம் ஸாதிக்கிற தேவரீரா இப்படி கேட்பது? வகுளபூஷண பாஸ்கரோதயமான இத்திருநகரியிலே வேறு ஸூர்யோதயமும் வேணுமோ?'' என்றார்கள். அதன்மேல் எனக்கு ஒன்றும் தோன்றாமல் வெட்கி வாய்மூடி வந்துவிட்டேன்.

## அந்த ஸந்தர்ப்பத்தில் மற்றொரு வேடிக்கை

அக்காலத்தில் இரண்டு சிறுபிள்ளைகள் என்னோடு கூடவே இருந்துகொண்டு எனக்கு உபசாரங்கள் செய்வார்கள். ஒருநாள் அவ்விருவருள் ஒருவனைக்கேட்கிறேன் - 'மாணி! நீ தவறாமல் ஸந்த்யாவந்தனம் செய்வதுண்டா?' என்று. அதற்கு அவன் ''ஸ்வாமி! இவ்வூரில் தீர்த்தத்திற்கு என்ன பஞ்சம்! தெருவெல்லாம் பெருகிக்கிடக்கிறதே! ஸந்த்யாவந்தனம் தவறாமல் பண்ணுகிறேன்'' என்றான். உடனே மற்றொரு பிள்ளையை நோக்கி, மாணீ! உன் கதை என்ன? என்றேன். அதற்கு அவன் சொன்னதாவது, ''ஸ்வாமி! அவனுக்கு இரண்டு பாபம், எனக்கு ஒரு பாபம். அவன் ஸந்த்யாவந்தனம் பண்ணாதது ஒரு பாபம், பண்ணாமல் இருந்தும் பண்ணினேன் என்று சொல்வது மற்றொருபாபம். எனக்கு ஸந்த்யாவந்தனம் பண்ணாதபாபம் ஒன்றேதான் என்றான். இதைக் கேட்ட மற்றொருபிள்ளை சொல்லுகிறான் ''ஸ்வாமி! அவனுக்கும் இரண்டு பாபம் உண்டு. ஸந்த்யாவந்தனம் பண்ணாத பாபம் அவனை ஒத்துக்கொண்டது! தன் சங்கதியைச் சொல்லிவிட்டு நில்லாமல் வீணாக என்னைப்பிடித்திழுத்துப் பழிப்பது மற்றொரு பாபம் அல்லவா?'' என்றான். இதை நான் அக்காலத்தில் அடிக்கடி உபந்யாஸத்திலும் சொல்லி வந்தேன். இடையில் வெகுகாலம் இவர்களை மறந்தேபோனேன். திடீரென்று ஒருநாள் என் ஸந்நிதியில் வந்தார்கள் இவர்கள். தற்காலம் மூன்று மாதகாலமாக ஆழ்வார்திருநகரியில் பகவத் விஷய ப்ரவசனார்த்தமாக எழுந்தருளியிருக்கிற வாதம்ருதவர்ஷி ஸ்ரீமதுபயவே. வரதாசார்ய

ஸ்வாமிக்கு இவர்களுடைய யோகக்ஷேமத்தைத் தெரிந்து கொண்டு ஸ்ரீமுகம் ஸாதிக்கும்படி எழுதியிருக்கிறேன். அவ்விருவர்க்கும் இப்போது ஏறக்குறைய ஐம்பது வயது இருக்கும். அவர்களைச் சந்திக்க ஆவலோடு இருக்கிறேன்.

இஃதெழுதிக் கொண்டிருக்கையில் திருவல்லிக்கேணி வேதவேதாந்தவர்த்தினி சபா ப்ரவர்த்தகர்களிடமிருந்து ஒரு அழைப்புக்கடிதம் கிடைத்தது. "வேத வேதாந்த வர்த்தினி சபையின் வருஷாந்தக் கொண்டாட்டம் 2-12-73 ஞாயிற்றுக் கிழமையன்று ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமிதேவஸ்தானத்தில் நடக்கவிருக்கிறது. அன்று வழக்கப்படி வித்யார்த்திஸம்மானத்தை நடத்தி உபந்யாசமும் நடத்து வதற்கு எழுந்தருளவேணும்" என்று அழைப்பு வந்தது. அப்படியே வருவதாக இசைந்து பதில் எழுதியாயிற்று. பின் நடந்த செய்திகள் பின்னே வரும். இப்போது அந்த சபையின் முன்னைய சரித்திரங்கள் நினைவுக்கு வந்தவற்றை எழுதுகிறேன். நூறு வருஷங்களுக்கு மேலாக இந்த சபை திருவல்லிக்கேணியில் விசேஷ வைபவமாக நடைபெற்று வருகின்றது. இதை ஸ்தாபித்தவர்கள் மிக விசாலமான நோக்குமுள்ளவர்கள். 50, 60 ஆண்டுகட்கு முன்பு மானாமாமலை வரையிலுமுள்ள தென்னாட்டுத்தலங்களிலிருந்தும் மைசூர்வரையிலுமுள்ள மேல்நாட்டு நகரங் களிலிருந்தும் வித்யார்த்திகள் ஸாமான்ய சாஸ்த்ரங்களிலும் அத்யாத்ம சாஸ்த்ரங் களிலும் பரீக்ஷைகொடுத்துப் பரிசுவாங்கவருவார்கள் அக்காலம் இனிவரப்போவ தில்லை. நான் என்னுடைய 17, 18, 19 ஆகிய பிராயங்களில் (வரிசையாக 3 வருஷங் களில்) இச்சபையில் பரீக்ஷை கொடுக்கப் போயிருந்தேன். வேதார்த்தஸங்க்ரஹ கீதா பாஷ்யாதிகளிலும் திவ்யப்ரபந்த- தவ்யாக்யானங்களிலும் பரீக்ஷை கொடுத் திருக்கிறேன். அப்போது நான்கொடுதத பரீக்ஷைக்கு சூர்க்கத்திப்பரீக்ஷை என்று பெயர். சூர்க்கத்தியைத் தீட்டி எதிரே வைத்திட்டுக் கேள்வி கேட்கச் சொல்லி, தப்பினால் இக்கத்தியால் என் நாக்கை அறுத்திடுங்கள் என்று சொல்லிப்பரீக்ஷை கொடுப்பது சூர்க்கத்திப்பரீக்ஷை எனப்படும். இதைப்பற்றின விவரங்களை நானே எழுதிய என் சரிதையில் விளக்கியிருக்கிறேன். அதில் சில பரீக்ஷைகளையும் என் விடைகளையும் விளக்கியிருக்கிறேன். இக்காலத்தில் பரீக்ஷிப்பவர்கள் பரீக்ஷிக்கிற ரீதியில் அல்ல எனக்கு நடந்த பரீக்ஷைகள். அந்த வேடிக்கையைச் சிறிது தெரிவிக் கிறேன். 'எறும்புக்கு எத்தனை ஆழ்வார்களின் பாடல்? இரும்புக்கு எத்தனை ஆழ் வார்களின் பாடல்? நாய்க்கும் நரிக்கும் எத்தனை ஆழ்வார்களின் பாடல்? தேளுக்கும் பாம்புக்கும் எத்தனை ஆழ்வார்களின் பாடல்?' என்று இப்படியெல்லாம் கேட்பார்கள். இவற்றுக்குச் சொல்லவேண்டிய பதில்களை அவர்கள் தெரிந்துகொண்டு கேட்டவர் களல்லர். தமாஷாக அவர்கள் கேட்டுவிடுவர்கள். உடனே நான் பதில் சொல்லி விட்டு இது தவறாக இருந்தால் நிரூபியுங்கள் என்பேன். இதைச் சிறிது விவரிக்கிறேன். எறும்புக்கு எத்தனை ஆழ்வார்களின் பாடல்? என்று கேள்வி. "திருவாய்மொழியில் (கற்பாரிராமபிரானையல்லால் பதிகம்) *புற்பா முதலா புல்லெறும்பாதி யொன்றின்றியே" என்று நம்மாழ்வார் பாடல். "நெய்க்குடத்தைப் பற்றி ஏறுமெறும்புகள் போல்" என்பது பெரியாழ்வார் பாடல். "இருபாடெரி கொள்ளியின் உள்ளெறும்பே போல்" என்பது திருமங்கையாழ்வார் பாடல். ......எறும்புக்கு இவ்வளவே பாடல் என்பேன். இரும்புக்கு எத்தனை ஆழ்வார்களின் பாடல்?" என்று கேட்டார்கள். "இரும்புபோல் வலியநெஞ்சம்" என்று தொண்ட

ரடிப் பொடியாழ்வார், ''இரும்பு அனன்றுண்ட நீர்'' (இருமுறை) என்று திருக்குறுந் தாண்டகத்தில் திருமங்கையாழ்வார்...... என்று விடை. இவ்விதமாக பரீக்ஷை நடந்து கொண்டிருக்கையில் ''நாய்க்கும் நரிக்கும் பாடல் சொல்லும்'' என்றார்கள். ''(நாய்க்கு) திருவாய்மொழியில் *நாய் கூழைவாலால்*; திருமாலையில் *மிண்டர் பாய்ந்துண்ணும் சோற்றைவிலக்கி நாய்க்கிடுமினீரே*, பெரியதிருமொழியில் (அஹோபிலப் பதிகம்) *எவ்வு நாயுங் கழுகும்......* (நரிக்கு) திருவாய்மொழியில் ஆளியைக் காண்பரியாய் அரிகாண் நரியாய்; பெரியாழ்வார் திருமொழியில் *நரிப் படைக்கொரு பாகுடம் போலே.* பெரியதிருமொழியில் *வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே......''என்றிப்படிச் சொல்லிக் கொண்டே போகும்போது ''நாய்க் குச் சொல்லவேண்டிய பாசுரங்களெல்லாம் சொல்லியாகி விட்டதா?'' என்றார். ''ஆம், நிச்சேஷமாகச் சொல்லிவிட்டேன்'' என்றேன். பெரியாழ்வார் திருமொழி சென்னியோங்கு பதிகத்தில் 'நின்னுள்ளேனாய் பெற்றநன்மை இவ்வுலகினில் ஆர் பெறுவார்?' என்பதை விட்டுவிட்டீரே'' என்றார். இதை அவர் வேடிக்கையாகச் சொல்லுகிறார் என்று முதலில் நினைத்தேன். அதனால் அதற்கு விடைகூறாமல் தலை குனிந்து நின்றேன். அவரோடு கூடவிருக்கிற பண்டிதர்களும் அப்பாசுரத்தை நான் சொல்லத் தவறிவிட்டதாகவே நினைத்தார்கள். ''அங்கு 'நின்னுள்ளேன்' ஆய் என்று பதவிபாகமே யொழிய ''நின்னுள்ளே நாய்'' என்று பதவிபாகம் இல்லை. ஆகை யால் ''*ஏரார்ந்த கருநெடுமால் இராமனாய்' மூவுருவிலிராமனாய்க் கண்ணனாய்'' என்றிவை முதலான பல பாசுரங்களையுந் தான் அடியேன் விட்டுவிட்டேன். இத் தகைய பாசுரங்கள் நூற்றுக் கணக்காக திவ்ய ப்ரபந்தங்களில் வருகின்றனவே. தேவரீர் நாயைப்பற்றிக் கேட்டபடியால் அது வருமிடங்களை மட்டும் சொல்லு கிறேன்'' என்றேன். அப்போது நான் மற்றையோர்க்கும் விஷயம் புரிந்தது. இதை இங்கு நான் மேலும் விவரிக்க விரும்பவில்லை......இந்த வேத வேதாந்த வர்த்தினி சபையின் நூற்று நான்காவது வருஷோத்ஸவக் கொண்டாட்டம் நேற்று (2—1—73) ஞாயிற்றுக்கிழமை மாலையில் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸன்னிதியில் நடைபெற்றது. இதன் நிகழ்ச்சியை மேலே எழுதுகிறேன்.

## ஓர் அற்புதமான நினைவு

திருத்தகப்பனாரிடத்தில் பெரியாழ்வார் திருமொழி சந்தை நடக்கிறது. மூன்றும்பத்தில் முதற் பதிகத்தில் *மையார்கண் மடவாய்ச்சியர் மக்களை* என் கிற பாசுரத்தில் *பொய்யா உன்னைப் புறம்பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்* என்ற மூன்றும் அடியைத் தகப்பனார் சாதிக்கிறார். பொய்யா என்பது பையா என்றதாக என் காதில் விழுந்து *பையா உன்னைப் புறம் பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன் என்று மூன்று விசை சொல்லுகிறேன். அப்போது பிதாமஹி பக்கத்திலேயே உட்கார்ந்திருக்கிறார். தகப்பனார் அவரிடம் சொல்லு கிறார்-'நான் 'பொய்யா உன்னை' என்றால் இவன் 'பையா உன்னை' என்கிறான். இது மெய்யாகவே ஆகப்போகிறது. இவன் பண்ணுகிற சேஷ்டைகளுக்கு எத்தனையோ புத்தகம் பிறக்கப்போகிறது'' என்று ஏதேதோ ஸாதிக்கிறார். இது கண்ணபிரானை நோக்கி யசோதை சொல்லுகிற பாசுரம். அப்போது கண்ணனைப்பற்றி ஒரு புத்

தகமும் கிடையாது. க்ருஷ்ணவதாரம் முடிந்த பிறகே அவனுடைய சரிதைகளைக் கூறும் புத்தகங்கள் அவதரித்தன. என் விஷயத்தைச் சொல்லுகிறேன். என்னால் ஏற்பட்ட புத்தகங்களும் பிறரால் (என் விஷயமாக) ஏற்பட்ட புத்தகங்களும் எத்தனை தெரியுமோ? இது திருத்தகப்பனார் திருவாக்கு பலித்தபடி.

## ஸ்ரீஸூக்தி ரத்நாகரஸ்வாமி பற்றிய சிந்தனைகள்

திருநாராயணபுரத்தில் இருந்து ஆழ்வார் திருநகரியில் இளையவில்லி ஸ்வாமி திருமாளிகைக்கு ஸ்வீகாரமாக எழுந்தருளி அவ்விடத்திலேயே நாற்பது பிராயம்வரை எழுந்தருளியிருந்து பிறகு நம்பெருமாள் ஸன்னிதியில் நித்ய வாஸத்தை விரும்பி அங்கே வந்து சேர்ந்து [இந்நிலவுலகின் தௌர்பாக்யத்தினால்] ஒன்றரை வருஷத்திற்கு முன்பு திருநாடலங்கரித்தருளின ஸ்ரீமதுபயவே. இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமியை அறியாதார் இல்லை. [இவர் எனக்கு சம்பந்தியுமாவர்] இந்த ஸ்வாமி உபயவேதாந்த நிர்வாஹகர். விசேஷித்து ஆழ்வார் திருநகரியிலும் ஸ்ரீரங்கத்திலும் திருச்சியிலும் பகவத்விஷய ரஹஸ்யாதி ப்ரவசனங்கள் செய்து கொண்டிருந்தவர். இவர் எனக்கு சம்பந்தியாகப் பெற்றது இருபது வருஷங்களுக்குள்ளாக. அதற்கு முந்தியே அவருடைய பதினைந்தாவது பிராயத்திலிருந்தே பழக்கமுண்டெனக்கு. அக்காலத்தில் நான் அடிக்கடி ஆழ்வார் திருநகரிக்குச் செல்வதுண்டாகையால் இவருடைய நட்பு பலகாரணங்களால் தொடர்ந்து வந்தது. அக்காலத்திலிருந்தே இவர்க்கும் எனக்கும் கடிதப்போக்குவரத்து விசேஷமாக நடந்து வந்தது. இடையில் இரண்டு மூன்று ஸம்வத்ஸரம் ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்ந்து அங்கே ஸம்ஸ்க்ருத ஸாஹித்ய சாஸ்த்ராப்யாஸமும் செய்து, திருநகரிக்குத் திரும்பிச் சென்ற காலம் முதலாக இவருடைய ஞானவைலக்ஷண்யம் மிகச் சிறந்தோங்கத் தொடங்கிற்று. வாரந்தோறும் ஒவ்வொரு கடிதம் நிஸ்டதாக நியமேந வந்து கொண்டிருக்கும். அவர் பரம பதித்த காலம் வரையில் எனக்குக் கிடைத்த அவரது ஸ்ரீமுகங்கள் குறைந்தபக்ஷம் முந்நூறு இருக்கும். அவற்றிலுள்ள வாக்யராசிகள் ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி போலவே இருக்கும். இது காரணமாகவே அவர்க்கு ஸ்ரீஸூக்தி ரத்நாகரமென்கிற விருதையளித்தேன். இவ்விஷயங்களெல்லாம் அவ்வக்காலங்களில் நமது ஸ்ரீராமாநுஜனில் வெளியிடப்பட்டவையே. அந்த ஸ்ரீஸூக்தி வைகரிகள் அடிக்கடி நினைவிற்கு வந்து கொண்டிருக்கின்றன. அப்போதுகளில் உள்ளங்குளிரும். இது எனக்கு ஒரு விலக்ஷணமான ஆநந்தம். இவருடைய திருத்தம்பியாரான ஸ்ரீமதுபயவே. திருமலை. அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியர் [வ்யாகரண வேதாந்த வித்வான்] திருவரங்கம் பெரிய கோயிலில் உபயவேதாந்த ப்ரவசன துரீணராய் எழுந்தருளியிருப்பது அனைவருமறிந்ததே. இவருடைய கடிதங்களும் பலபல அடிக்கடி கிடைப்பதுண்டு. இது எழுதிக்கொண்டிருக்கும் போதும் ஒரு கடிதம் கிடைத்தது. இவரும் திருத்தமையனார்போலவே திவ்ய ஸூக்திமயமாகவே எழுதப் பயின்றுவிட்டார்.

மேலே ப்ரஸ்தாவித்த இளையவில்லி ஸ்வாமியின் மூத்த திருக்குமாரனை ஸ்ரீமான். சிரஞ்சீவி. பூவராஹன் M.A., பெங்களூரில் உயர்பதவியில் வாழ்பவன். கலையறக்கற்ற மாந்தர் என்றும், கலையிலங்கு மொழியாளர் என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளை நினைவூட்டும் கடிதங்களை இவனிடமிருந்தும் அடிக்கடி பெற்று வருகிறேன். இவை எனது நித்ய சிந்தனைகளில் தலைசிறந்து நிற்பவை.

அபூர்வார்த்த ரத்னநிதி—(முன்தொடர்ச்சி)

## 114. ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே.

பெரியாழ்வார் திருமொழி மூன்றாம் பத்தில் மூன்றாம் பதிகத்தின் முதற் பாட்டின் ஈற்றடியிது. பாட்டைப் பூர்த்தியாகக் கேண்மின். "சீலைக்குதம்பை யொருகாதொருகாது செந்நிறமேல்தோன்றிப்பூ கோலப் பணைக்கச்சும் கூறையுடையும் குளிர் முத்தின் கோடாலமும் காலிப்பின்னே வருகின்ற கடல் வண்ணன் வேடத்தை வந்து காணீர் ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானே மற்றாருமில்லை". உலகத்தில் நம்மைச் சிலர் புகழ்ந்து பாராட்டிப் பேசினால் அதனால் நமக்குப் பரம ஸந்தோஷமுண்டாகிறது. அஃதிருக்கட்டும். நம்மைப் பிறர் புகழ்வதிற காட்டிலும் நம்மை நாமே புகழ்ந்து கொள்வதும் ஒரு புடையுண்டு. அது தற்புகழ்ச்சியின் பாற்படாது. ஆனந்த பரீவாஹ ரூபமாயிருக்குமது. திருவாய்மொழியில் குரவையாய்ச்சியர் பதிகத்தில் *என்ன குறை நமக்கே *எனக்கெவ்வுலகம் நிகரே, *எனக்கினியார் நிகர் நீணிலத்தே *எனக்கார் பிறர் நாயகரே! என்றும் இராமாநுச நூற்றந்தாதியில் *இராமாநுசன் ...நிறைந்தொப்பற விருந்தான் எனக்காரும் நிகரில்லையே" என்றும் இங்ஙனேயாகக் காணும் பாசுரங்கள் செருக்கு மொழியாகத் தோன்றினாலும் அது குற்றமன்று. தற்புகழ்ச்சி குற்றமாகிற தன்மையும் உண்டு. "நன்னூலில் தான் தற்புகழ்தல் தகுதியன்றே" என்று சூத்திர மிட்டவர் உடனே "தன்னைப்புகழ்தலும் தகும் புலவோர்க்கே"-என்றும் கூறிவைத்தார். யசோதைப் பிராட்டிக்கு *என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள் என்னும் வார்த்தையெய்துவித்த என்ற பாசுரத்தினாலே பிறரால் கிடைத்திருக்கும் புகழ்ச்சி பெரிதன்று. *விண்ணின் மீதமரர்கள் விரும்பித்தொழ மிறைத் தாயர் பாடியில் வீதியூடே கண்ணன் காலிப்பின்னே எழுந்தருளக்கண்டு ஆனந்தம் பொங்கிப் பேசுகிற பாசுரம் *ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானே மற்றாருமில்லை" என்பது. இது ஆனந்த மிகுதியினால் ஆயது.

## 115 தண்டேனுகரா மண்டூகங்கள்

"தண்டேனுகரா மண்டூகம் தண்டாமரையினுடன் பிறந்தே
வண்டே கானத்திடைப் பிறந்தும் வந்தே கமலமதுவுண்ணும்
அண்டே பழகியிருந்தாலும் அறியார் பொல்லோர் நல்லோரைக்
கண்டே களிப்பர் உறவாடிக் கற்றோர் நல்லோர் பெற்றக்கால்"

ஸம்ஸ்க்ருத ஸாஹித்யத்தில் ஸுபாஷிதம் என்று வழங்கக்கூடிய சுலோகங்கள் பல்லாயிரக் கணக்கில் உள்ளன. ஸுபாஷித நீவி, ஸுபாஷித கௌஸ்துபம் பண்டிதராஜ சதகம், பர்த்ருஹரிஸுபாஷிதம், ஸுபாஷித ரத்னபாண்டாகாரம் முதலிய நூல்கள் வடமொழியில் உள்ளதுபோல் தமிழ் மொழியில் விசேஷமாகக் காணக்கிடைக்கவில்லை. மேலே குறித்த பாடல் விநோத ரஸமஞ்சரியில் உள்ளது அதன் பொருளை நாம் விவரிக்க வேணுமோ? சுருக்கமான கருத்தைக் கேளீர். தவளை தாமரையோடு கூடவேதான் பிறக்கிறது. பிறந்து என்ன பயன்? தாமரை மலரின் மகரந்தத்தைப் பருக அதற்குப் பாக்கிய மில்லையே சேற்று நீரைக்குடித்து கர்ண கடூரமாகக் கத்துகின்றதத்தனை. வண்டு என்கிற பிராணி காட்டில் எங்கேயோ பிறந்தும் தாமரையோடைகளுக்குப் பறந்தோடிவந்து மது

வைப் பருகி முடலக் காண்கிறோம். இதேபோல, சில அறிவிலிகள் பெரியோர்களிடையே பிறந்து வைத்தும் அவர்களது சொற்சுவைகளைப் பருகியின்புறகில்லார். விதேசங்களிலுள்ள அறிவாளிகள் அந்தகைய பாக்கியம் பெறுகிறார்கள் என்பதாம். இச்செய்யுளை வடமொழியில் ஒரு சுலோகமாக்கும்படி திருத்தகப்பனால் நியமிக்கப் பெற்றவடியேன் விண்ணப்பம் செய்த சுலோகம் வருமாறு.

"மண்டுக: கமலேந ஸாகம் உதிதோபி
ஏதத்ரஸம் நோ பிபேத்,
ப்ருங்க: காநநஜோபி ஹந்த விபிநாத்
ஆகத்ய புங்க்தே மது.
ஏவம் ஸஜ்ஜந ஸங்கதோபி கிதவ:
நோ வேத்தி தத்வைபவம்
ஸந்தஸ் ஸத்புருஷாநவேக்ஷ்ய ஸ்வைரா
ஸ்நிஹ்யந்தி ஹ்ருஷ்யந்தி ச" என்று.

## 116 தாய்க்கும் மகனுக்கும் ஐவர்

ஆசார்ய ஹ்ருதயம் மூன்றும் பிரகரணத்தில மகளற்புதமான சூர்ணையொன்று; அதுதான் "தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே இவையுள்ளது." என்பது. இதன் கீழ்ச் சூர்ணையாவது, நண்ணுதார் மெய்யில் ஊனுசை நிர்வேதத்தோடே ........ஞாலத்தார் பந்த புத்தியும் அநர்த்தங்கண்டு ஆற்றாமையும் மிக்க க்ருபையுமிறே" என்பது. அதன் சுருக்கமான கருத்து என்னென்னில் மிக்க நிர்வேதத்தோடே வந்து அடிபணிந்து பலகால் நிர்ப்பந்தித்து உபதேசம்பெற விரும்புமவர்க்கு உபதேசிக்க வேண்டிய அரிய பெரிய பொருள்களை ஆழ்வார்கள் அவலீலையாக உபதேசிப்பது கூடுமோ என்று சங்கித்து, பாமரர்களின் அநர்த்தங்கண்டு ஸஹித்திருக்க மாட்டாமையாலும், தங்களது பரம க்ருபையினாலும் உபதேசிக்கிறார்களாகையாலே குறையில்லை, என்று சங்கைக்குப் பரிஹாரம் செய்ததாயிற்று. அதற்கடுத்த இந்த சூர்ணையினால் அப்படி உபதேசித்தவர்கள் ஐவர் என்று நிரூபணம் செய்கிறது. தாய்க்கு என்றது ஸர்வலோக ஜநநியான ஸீதா பிராட்டிக்கு என்றபடி. மகனுக்கு என்றது இரணியன் மகனான ப்ரஹ்லாதாழ்வானுக்கு என்றபடி. தம்பிக்கு என்றது இராவணன் தம்பியான விபீஷணாழ்வானுக்கு என்றபடி. இவர்க்கு என்றது (ஆசார்யஹ்ருதய க்ரந்தத்திற்கு இலக்கான) நம்மாழ்வார்க்கு என்றபடி. இவரடிபணிந்தவர்க்கு என்றது, "மாறனடிபணிந்துய்ந்த விராமானுசன் என்று புகழ் பெற்ற எம்பெருமானார்க்கு என்றபடி. இப்பெரியார்களுக்கே 'ஞாலத்தார் பந்த புத்தியும் அநர்த்தங்கண்டு ஆற்றாமையும் மிக்க க்ருபையும்' உள்ளது என்றதாயிற்று. ஸ்ரீராமாயணத்தில் "விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞ:" "மித்ரமௌபயிகம் கர்த்தும்" இத்யாதிகளாலே பிராட்டி இராவணனுக்குச் செய்த உபதேசமும் தன்னைப் பலவாறு நலிந்த தந்தையான இரணியனுக்கு "ஸர்வபூதாத்மகே தாத" இத்யாதிகளாலே மகனான ப்ரஹ்லாதாழ்வான் செய்த உபதேசமும். "ந நச்யாந்தமுபேக்ஷேயம் ப்ரதீப்தம் சரணம் யதா" இத்யாதிகளாலே இராவணனுக்கு விபீஷணாழ்வான் செய்த உபதேசமும் "சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ" என்று நம்மாழ்வார் ஸம்ஸாரிகளுக்குப் பன்முறையும் செய்த உபதேசமும் எம்பெருமானார் திருக்கோட்டியூரில் செய்த உபதேசமும் அவர்தாமே 'ஞானதேசிகராசரின்னருளால்

பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின்'' என்கிற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தின்படி ஆரியர்களுக்கு இட்டருளின கட்டளையும் பரமக்நபையிறலன்றோ.

## 117 திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை

திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் திருவிடவெந்தை மங்களாசாஸனப் பதிகத்தின் முதற்பாசுரமிது. கீழே 160 பாசுரங்களைத் தாமான தன்மையில் அருளிச்செய்துவந்த ஆழ்வார் இப்போது பெண்மையெய்திப் பேசுகிறார். (அதாவது) தாம் பரகால நாயகியாயிருந்து, தன்னைப்பற்றித் தனது திருத்தாயார் மனக்கவலை கொண்டு பேசுவதாக அமைந்தது இப்பதிகம். திருவாய்மொழியில் நம்மாழ்வார் தாமான தன்மையிற் பேசுவது தவிர தலைமகள் பாசுரமாகவும், தாய் பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் பல பதிகங்கள் பாடியுள்ளார். அவர் தோழி பாசுரமாகப் பேசிய பதிகங்கள் மூன்று. தாய்பாசுரமாகப் பேசிய பதிகங்கள் ஏழு; தலைவி பாசுரமாகப் பேசிய பதிகங்கள் பதினேழு. ஆக, இருபத்தேழு பதிகங்கள் போக மற்றெழுபத்துமூன்று பதிகங்கள் தாமான தன்மையில் அருளிச்செய்தவை என்று தேறிற்று. கீழே விவரித்த இருபத்தேழு பதிகங்கட்கு அந்யாபதேசப் பாசுரங்கள் என்று பெயர். உண்மையில் பேசுகிறவர் ஆழ்வார் தாமாகவேயிருந்தும் தாய் பேசுவதுபோலவும், தோழி பேசுவதுபோலவும், தலைவி பேசுவதுபோலவும் வைத்துப் பாடினபடியால் அந்யாபதேசப் பேச்சென்கிறது. இங்ஙனே பெண்மை எய்திப் பேசும் முறை *மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற வைதரித்த மங்கையர்கோனுடைய பாசுரங்களிலும் காணக்கிடைக்கும். பெரியாழ்வார் திருமொழியில் *ஐயபுழுதியுடம்பளைந்த, *நல்லதோர் தாமரைப் பொய்கை என்கிற இரண்டு பதிகங்கள் மட்டும் தாய்பாசுரமாகத் தோன்றியவை. குலசேகராழ்வார் ஆய்ச்சியர், தேவகிப்பிராட்டி, கௌஸல்யாதேவி இவர்களுடைய தன்மையைத் தாம் எய்தி அவர்கள் பேசுவதுபோல் தாம் பேசியிருக்கிறாரேயன்றி பராங்குச பரகாலர்களைப்போல் தாம் பெண்மையை யெய்திப் பேசவில்லை. இது நிற்க. ப்ரக்ருதம் திருமங்கையாழ்வாருடைய *திவளும் வெண்மதிபோல் பதிகத்தைப்பற்றிச் சிறிது கேண்மின். நம்மாழ்வார் தமது திருவாய்மொழியில் (2-4) ஆடியாடிப் பதிகத்தில் தாய்பாசுரமாகப் பேசுவதைத் தொடங்கி (7-2) கங்குலும் பகலும் பதிகத்தோடு தாய் பாசுரத்தைத் தலைக்கட்டினார். இவ்வாழ்வாரும் இரண்டாம் பத்திலே தாய்பாசுரமாகப் பேசுவதைத் தொடங்கி 9-ம் பத்தில்* மூவரில் முன்முதல்வன் என்கிற திருமாலிருஞ் சோலைப்பதிகத்தோடு தாய்பேச்சை முடித்துக்கொண்டார். தலைவி பாசுரமாகப் பேசுவதை இரண்டாம் பத்தில் திருவட்டபுயகரப் பதிகத்தில் தொடங்கி பதினோராம்பத்தில் மன்னிலங்கு பாரதத்துப் பதிகத்தோடு தலைக்கட்டினார். தோழி பாசுரமாக ஒரு பதிகமும் பாடிற்றிலராகிலும் தோழியோடு பேசியிருப்பதாக வைத்துப் பாடியிருப்பதை "அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டுந் தோழீ" "தோழீ கூவென்னுமால் தோழீ நான் என் செய்கேன்" என்றிவை முதலான பலவிடங்களில் காணலாம். இப்போது நாமெடுத்துக் கொண்ட திருவிடவெந்தைப் பதிகத்தில் மிகச் சிறந்த ஸம்ப்ரதாயார்த்தம் ஒன்றுண்டு. அது, ஸ்ரீவசனபூஷணத்தில் "உன்மனத்தாலென்னினைந் திருந்தாய் என்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம் அவன் நினைவு; அதுதான் எப்போதுமுண்டு. அது பலிப்பது இவன் நினைவு மாறினால்." என்கிற

ஸ்ரீ ஸூக்தியால் அறியத்தக்கது. நம்மாழ்வார் கடைசியாகத் தாம் வைத்த தாய்ப் பேச்சான* கங்குலும் பகலில் "இவள் திறத்து என் செய்கின்றாயே" "இவள் திறத்து என் செய்திட்டாயே?" "இவள் திறத்து என் சிந்தித்தாயே!"........ இப்படிக்கேட்ட கேள்விகளை திருமங்கையாழ்வார் தம்முடைய தாய்ப்பேச்சுத் தொடக்கத்திலேயே அமைத்திருக்கின்றார். இவ்விடத்தில் அறியவேண்டிய விசேஷார்த்தத்தை ஸ்ரீ வசனபூஷண வ்யாக்யானம் கொண்டறிவது.



## 118 தீயெம்பெருமான் நீரெம்பெருமான்

பெரிய திருமொழியில் திருவிந்தளூர்ப்பதிகத்தின் (4-9-5) விலக்ஷணமானதொரு பாசுரமிது. "தீயெம்பெருமான் நீரெம்பெருமான் திசையுமிருநிலனுமாய் *எம்பெருமானாகி நின்றால் அடியோம் காணோமால் தாயெம்பெருமான் தந்தை தந்தையாவீர்* அடியோமுக்கே எம்பெருமானல்லீரோ நீர் இந்தளூரீரே" என்பது பரமபோக்யமான பாசுரம். ஆழ்வார் திருநாங்கூர் திருப்பதிகளின் மங்களாசாஸனங்களை முடித்துக்கொண்டு திருவிந்தளூர்க்கு அகாலத்திலே வந்து சேர்ந்தனர் போலும். ஸந்நிதியில் திருக்காப்பு சேர்த்திருக்கச் செய்தேயும் பரிமளரங்கனை ஸேவிப்பதில் தாமதம் பொறுதவராய் தம்முடைய ஆர்த்தியெல்லாம் சொல் தொடையிலே நன்கு தெரியும்படி, கல்லும் கரையும்படி பேசத்தொடங்கினர். திருவாய்மொழியில், "மரங்களு மிரங்கும் வகை மணிவண்ணவோ வென்று கூவுமால்" என்றொரு பாசுரமுண்டே, அந்த வகையில் கூப்பிடுகின்றார்.



ஆழ்வாருடைய அளவுகடந்த கூப்பீட்டுக்குத் திருவுள்ளமுருகிச் சட்கெனவெளியேற வந்தருளவேணும் எம்பெருமான். ஆனாலும் ஆழ்வாருடைய இனிய பாசுரங்களைக் கேட்டருளவேணுமென்கிற விருப்பத்தினால் வாளாகிடந்தருளுகின்றான். எம்பெருமான் "ஆழ்வீர்! நான் அர்ச்சக பராதீநாகிலாத்ம ஸ்திதியானவன் என்பதை நீரறிவீரே. என்னை யிப்படி அகாலத்திலே நிர்ப்பந்தப்படுத்தி என்ன பயன்? "ஸர்வபூதாத்மகே தாத! ஜகந்நாதே ஜகன்மயே" என்று சொன்ன ப்ரஹ்லாதாழ்வான் ஒரு கோவிலுக்குப் போகவில்லையே. என்தன்னை எங்கெங்கு கண்டு க்ருதக்ருத்யனானவன் என்பதை அறிவீரே! அப்படி நீரும் இருந்திடலாகாதோ?" என்று உள்ளே கிடந்தபடியே ஸாதிக்க அப்பெருமான் தெளிவு பெறும்படி ஸாதிப்பது இப்பாசுரம். தீயெம்பெருமானென்கிற விப்பாசுரத்தை மீண்டும் சிந்தனை செய்யுங்கள். முன்னிரண்டடிகளால் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாருடைய மனப்பான்மையை அனுவதித்து அப்படி நானிருக்க முடியாது பிரானே என்கிறார். இரண்டாமடியில் அடியோம் காணோமால் என்றது மற்றைய ஆழ்வார்களையும் கூட்டிக்கொண்டு சொல்கிறபடி. ஆழ்வார்களுக்கு அர்ச்சாவதாரமேயன்றோ தஞ்சம்! அவ்வாழ்வார்களில் சிறப்புற்ற விவ்வாழ்வார் "உலகமேத்தும் கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லை யென்று மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே" என்றருளிச் செய்தவரன்றோ! ஆகவே தம்முடைய திடமான அத்யவஸாயம் தோற்ற 'அடியோம் காணோமால்' என்றதற்கும் மேற்பட 'அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீர் இந்தளூரீரே' என்று ஸாதிக்குமழகு அற்புதம்! அற்புதம்!! இதற்கு மேற்பட்ட அர்த்த விசேஷங்களை அடியேனுடைய பெரிய திருமொழி திவ்யார்த்த தீபிகையுரையில் அனுபவிக்க.